உ

சிவமயம்

# கந்தபுராண விளக்கம்



இது

யாழ்ப்பாணம்

விக்ரோறியாக்கலாசாலைத் தலைமையாசிரியர்

புலோலி

**சு. சிவபாதசுந்தரம் B. A.**

செய்தது.

கொக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விபவ௵ கார்த்திகை௴. (1928)

விலை சதம் ௩0.

இந்நூல்

சுப்பிரமணியதொண்டரும்

எனது "முன்னறிதெய்வமும்"

ஆகிய

தந்தைதாயரது

திருவடிச்சேவையாக

இயற்றப்பட்டது.

# உள்ளுறை.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| க | கசு | விசுபரூபம் | விசுவரூபம் |
| கூ | கஉ | உயிாகட்கும் | உயிர்கட்கும் |
| எ | உ௩ | கற்பிற்கப்படும். | கற்பிக்கப்படும். |
| கரு | க0 | வினின்பம் | வின்பம் |
| உ0 | கஉ | வென்னேடி | வென்னேடீ |
| ,, | உரு | சங்தோக்கிய | சாங்தோக்கிய |
| உஉ | உரு | சகததி | சகத்தி |
| ,, | உஅ | புததிரர் | புத்திரர் |
| ௩௩ | கஅ | மற்றயோர் | மற்றையோர் |
| ச0 | உச | வரமபு | வரம்பு |
| சஎ | கரு | தென்ணமே | தெண்ணமே |
| ருஎ | கரு | வலிங்திழுங்துச் | வலிங்திழுக்துச் |
| ருசு | க0 | போகின்கிறேன் | போகின்றேன் |
| சுக | க | பெருமைமை | பெருமை |
| சுச | கூ | முங்துப்பங்தரும் | முத்துப்பங்தரும் |
| சுரு | உரு | உண்மையாகர்து | உண்மையாகாது |
| சுஎ | சு | பிரமென்ப | பிரமமென்ப |
| கக௩ | அ | பணிங்து | பணித்து |
| கஉ0 | உகூ | ஞமங்கேட்டா | ஞமங்கெட்டா |

# முன்னுரை.

சிவபெருமான் ஆன்மாக்கள் உய்தற்பொருட்டு விஞ்ஞானகலருட் பக்குவராது சிற்சத்தியை விளக்கி வேதசிவாகமங்களை அறிவுறுத்தி அத்துவாரத்தால் தேவர், முனிவர், மனிதர் முதலிய யாவரும் முத்தி யின்பம் பெறும்பொருட்டுப் பேரருள் பாலித்தனர். இவ்விரு நூல்களும் இறை உயிர் தளையாகிய முப்பொருள்களின் தன்மையையும் உயிர் தளையினின்றும் நீங்கி இறையோடொன்றாகும் முறைமையையும் விளக்கும். முப்பொருள்கள் பொறிபுந்திகளுக் கெட்டாதன வாதலின் அவற்றைக் கூறு மிந்நூல்கள் விளங்குதற் கரியவாயின. அவற்றை ஒருவாறு விளக்குதற்கு எழுந்தவை சிவபுராணங்களாம். வேதசிவாகமங்கள் உயிரையும் சிவபுராணங்கள் உடலையும் போல்வன.

புராணக்கதைகளுட் சில வேதத்தின் வழிநூல்களாகிய பிராமண உபநிடதங்களிலே உதாரணமாகக் காட்டப்பட்டவைகளின் விரிவாம். எஞ்சியவை பெரும்பாலும் சரித்திரங்களே. புராணங்களிலுள்ள உண்மைகளுங் கிரியைகளும் வைதிகசைவ நூல்களினின்றெடுக்கப்பட்டுப் புராணகாரராற் பலவாறு தொகுத்தும் விரித்துங் கூறப்பட்டன. சரித்திரங்களையும் உதாரணக் கதைகளையும் பிரித்தறிந்து உதாரணக் கதைகள் குறிக்கும் உண்மைகளை ஆராய்ந்தறிதலே புராணங்களைப் போதிப்போரது முதற்கடனாம்.

பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைகள்
இறையுமோர் மறுவில யாவு மேன்மையே
மறைபல சான்றுள வாய்மை யேயவை
அறிஞர்கள் நாடியே யவற்றைக் காண்கவே*
(அவையடக்கம்—௧0)

எனக் கூறப்பட்டதுங் காண்க.

புராணங்களைப் போதிப்போரிற் பலர் ஞானநூல்களைத் துணைக்கொள்ளாமையின் உண்மையை உணராது புராணங்களைத் திரிபாக விளங்கி அவற்றை அவமதித்துத் தம்மையுங் கேட்போரையும் நரகிற் காளாக்குவர். இக்கேடுகள் சார்ந்தும் புராணங்கள் சைவசமயத்தைத் தாங்கி அதற்குப் பெருந்துணை புரிகின்றன. இங்ஙனமாதலின் இக்கேடுகள் சாராது புராணங்களின் வாய்மைகள் யாவுந் தேர்ந்துரைக்கப்பெறின் இவைகளால் வரத்தக்க நற்பயன் அளவிறந்ததாமென்பது கூறாதே அமையும்.

சிவபுராணங்களாவன: சைவம் (உச000 சுலோகம்), பவிடியம் (௩௧000), மார்க்கண்டேயம் (௩உ000), இலிங்கம் (௧௧000), காந்தம் (௧00000), வராகம் (உச000), வாமனம் (௧ச000), மற்சம் (௧ச000), கூர்மம் (௬000), பிரமாண்டம் (௧உ000).

தமிழிலுள்ள கந்தபுராணமானது வடமொழியிலுள்ள ஸ்காந்தமாபுராணத்தின் ஒரு பகுதியாம். ஸ்காந்தபுராணம் சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை,

* இதன்பொருள்:— இளம்பிறையணிந்த சடையாகிய முடியையுடைய சிவபெருமானுடைய பெருமையை விளக்குவனவாகிய சிவபுராணங்கள் சற்றேனுந் தவறில்லாதவை. அவைகளின் பெருமையை வேதங்களே யொத்துக்கொள்ளும். அவற்றினுள்ளன யாவும் வாய்மையே. அவ்வாய்மைகளை அறிவாளிகள் நுண்மையாக ஆராய்ந்தாலன்றி அறியமாட்டார்கள்.

பிரமசங்கிதை, விட்டுணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூர சங்கிதை என ஆறு சங்கிதையை யுடையது. இவை முறையே ருரு000, சு000, ௩000, ரு000, ௩000, க000 சுலோகங்களை யுடையன. இவற்றுட் சங்கரசங் கிதை பன்னிரண்டு கண்டங்களை யுடையது. முதற் கண்டமாகிய சிவரகசியகண்டம் பதின்மூவாயிரங் கிரந் தமுடையதாய், சம்பவகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தட்சகாண்டம், உபதேசகாண்டமென ஏழு காண்டங் களை யுடையது. அவற்றுள் முதல் ஆறு காண்டத் தையும் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் மொழிபெயர் த்துக் கந்தபுராண மென்னும் பெயரிய இந்நூலைப் பாடியருளினர்.*

அது பொருளளவாலும் விரிவாலும் தமிழ்நூல்கள் யாவற்றிலுஞ் சிறந்தது. பெருங்காப்பிய இலக்கணங் கள் யாவும் பொருந்தியது. அறம், பொருள், இன் பம், வீடாகிய நான்கையும் விளக்கி அவற்றைப் பெறும் வழியையும் சாதனத்தையுங் காட்டுவது. சிவ தருமோத்தரங் கூறும் அறங்களை நிலை நிறுத்துவது. பாரதம் முதலியவற்றைப் போலச் சரித்திரங்களையுங் கூறுவது. பெரியபுராணத்தை ஒப்பச் சிவபெருமானது திருவருட் சிறப்பையும் அடியாரது அன்புத்திறத்தையுங் கூறுவது. தோத்திர நூலாகிய தேவாரம் திருவாசகங் களைப் போல அரிய அருட்பாக்கள் நிறைந்துள்ளது. திருக்கோவையார்போலப் பொருளிலக்கணத்துக் கிலக் கியமாக ஆன்ம ஈடேற்ற முறையை ஒருங்கேகூறுவது. சாத்திர நூலாகிய சிவஞானசித்தியாரைப்போற் சைவ

---

* உபதேசகாண்டத்தைக் கோனேரியப்ப முதலியார் தமி ழிற் செய்தனர்.

சமயவுண்மையை நாட்டிப் புறச்சமயங்களைக் கண்டிப்பது. ஆயினும் சிவ உபாசனையின் பெருமையையும், சிவநிந்தையின் கொடுமையையும், உயிர்கள் முத்தி பெறும் முறைமையையும் விளக்குதலே முதல் நோக்கமாகக் கொண்டது.

சிவஉபாசனை செய்தோர் மார்க்கண்டேயர் சூரபன்மன் தக்கன் முதலியோர். இவர்களுள் மார்க்கண்டேயர் உண்மயக்கமின்றிப் பூசைசெய்ததால் அப்பூசை அவருக்கு என்றும் நீங்கா வின்பத்தைக் கொடுத்தது. சூரன் உலகவின்பத்தை வேண்டிச் செய்ததால், அவ்வழிபாடு அவ்வின்பத்தைச் சாருந் துன்பத்தையுங் கொடுத்துப் பின்னர் குமாரக்கடவுள்து திருவடி நிழலைக் கொடுத்தது. தக்கனது பூசாபலன் முதலில் அபூசையால் தாக்கப்பட்டமையின் அது அவற்கு நற்கதிகொடாது அவனை அசமாக்கி அவனைச் சார்ந்தோர்க்கும் பெருந்துன்பத்தை விளைத்தது.

சிவநிந்தை பாதகங்களுட் கொடியது. அதனோடு ஒத்துநோக்குமிடத்துப் பஞ்சமாபாதகங்கள் புண்ணியங்களெனத் தோன்றும். சிவநல்வினையானது வினைகளுட் சிறந்ததுபோலச் சிவத்துரோகம் வினைகளுட் கொடியதாம்.

முத்திப்பேற்றில் மலங்களை வெல்லும் முறை சூரபன்மன்வதையிலும் ஞானத்தை நல்கும் பான்மை வள்ளிநாயகியார் திருமணத்திலுங் காட்டப்பட்டன.

காவியமுறையாகப் பொருள்களைச் சிறப்பிக்குங்கால், ஒப்புகள் பொரும்பாலும் அருணெறிச்சார்புடையனவாக மிளிரும். முகில்கள் வானவில்காட்டி நந்திமலையில் மழைபெய்தல் வில்லைத்தாங்கிய கண்ணப்பநாயனார்

சிவலிங்கத்தில் நீர் சொரிந்ததை யொக்கு மெனப்பட்டது.

உண்மைகள் பெரும்பாலுஞ் செயலினால் விளக்கப்பட்டன. அறனல்லவற்றை நேரே விலக்குதல் ஆசிரியர்க்குடன்பாடன்று. எதிர்மறை விதிகள் பெரும் பயன் தருவனவல்ல. குழந்தைகள் கிணற்றடிக்குப் போகலாகாதென்பது ஓர் எதிர்மறைவிதி. இவ்விதியினாற் குழந்தைகள் கிணற்றடிக்குப்போதல் தடைபடாது. இது அங்குபோகக் கருதாக் குழந்தைக்கும் போகவழி காட்டுவதாக முடிதலு மாகும். கிணற்றடிக்குப்போதலைத் தடுக்கவேண்டுமாயின் ஒரு குழந்தை கிணற்றடிக்குப் போய்த் தவறிக் கிணற்றில் வீழ்ந்திறந்தது என்று அக்குழந்தைக்குச் சொல்லுதல் பயனுடைத்தாம். ஆசிரியர் அறிவூட்டும் முறைமை யிதுவே. சிவநிந்தையால் வருந்தீமை தக்கனது யாகத்தாலும், மகளிரை விரும்பல் காசிபன் புலம்பலாலும் இந்திரன் வருந்தியதாலும், பெரியாரைப் பிழைத்தல் வில்வலன் வாதாவிப் படலத்தாலும் விளக்கப்பட்டன. சைவசித்தாந்தவாய்மைகள் காசிபன் உபதேசத்திலும், வேதத்தின் மெய்ப்பொருள் உபதேசப்படலத்திலும், சிவபிரானதருட்செயற்றெளிவு ததீசி யுத்தரத்திலும், துறவற இல்லறச் சிறப்புகள் மார்க்கண்டேயப் படலத்திலும், பொருட்பெருமை மாயையுபதேசத்திலும் ஆசிரியர் காட்டியருளினர். உலகாயதம் மாயாவாதம் மீமாம்சம் வைணவம் ஆகிய சமயங்களின் இழிவை இந்திரபுரி சுக்கிரனுபதேசம் ததீசியுத்தரம் திருக்குற்றாலம் ஆகிய படலங்களில் ஆசிரியர் பெரும்பாலுஞ் செயலினால் விளக்கியருளினார். வள்ளியம்மை திருமணப்படலத்தில் முத்திநெறியை நன்குகாட்டியருளினர். புரா

ளவரலாறுங் கந்தபுராணக் கதைச்சுருக்கமும் பாயிரத்திற் கூறப்பட்டன.*

சுவாமிகளது தமிழ்நடை மிக எளிது. இலக்கண இலக்கிய அறிவு சிறிதுடையாருங் கற்றுய்வடைதலே சுவாமிகளது நோக்கம்போலும். சொற்களுஞ் சொற்றொடர்களுஞ் சாலவினியன. பிற்காலத் தமிழ்நடைத் தலைவராகிய ஆறுமுகநாவலர்பெருமானது நடை கந்தபுராணநடையே. சுவாமிகள் கம்பர்போற் கதையைப் பெருப்பியாது விரைவாக வளர்த்துச் சொல்லுபவர். பொருட்செறிவுக்கும் உறுதிக்கும் இக்காவியம் ஒப்புயர்வற்றது. "வல்லவனுக்குப் புல்லுமாயுதம்" ஆதலுமன்றி அப்புல்லினுல் இருப்புவாளைத் துணிக்கும் வன்மையும் சுவாமிகளுக்குள்ளது. மேருமலைக்கும் விந்தமலைக்கு முள்ள ஏற்றத்தாழ்ச்சியாராய்வில் விந்தமலையை மேலாகக் காட்டியது அரும்பெரும் நுண்மையே. வாதங்களில் உண்மையை நிறுத்துங்காற் பொய்மையைத் தகர்ப்பதோடு நில்லாது அதைத் துகளாக்கியும் விடுவர். சூரபன்மன் ஆயிரத்தெட்டண்டங்களை யாளும் பெருமையைக் கூறியபோது வீரவாகுதேவர் சொல்லியருளிய விடையிலுள்ள (அவைபுகுபடலம்-கஉக) பொருட்செறிவும் வன்மையும் ஏனைய தமிழ்க்காவியங்களிலேனும் பிறமொழிகளிலுள்ளவற்றிலேனுங் காண்டலரிது. இந்நூலின்கணுள்ள சொற்றொடர்கள் அருளாகிய உயிரினையும் மந்திரமாகிய வலியினையுங்கொண்டு தெய்வ வடிவினவாய்க் கற்போர்க்கோ

---

* ஓரகன்ற நூற்கதையை அந்நூல் முழுதுங் கற்றேயறியவேண்டியதாயிருப்பின் அஃதுள்ளத்துக்குப் பெருஞ்சுமையாகும். இச்சுமையை நீக்குதற்காகச் சுவாமிகள் கதைச்சுருக்கத்தை முதலிற் கூறியருளினர். இது ஓதுவிக்கும் முறையிலே தொகுத்துச்சுட்டல் எனப்படும்.

ரருந் துணையென நின்று அவரது தனிமையை நீக்கி அவருக்குப் பெருமகிழ்ச்சியையுங் கிளர்ச்சியையும் விளைக்கும். கற்போர் கதைச்சிறப்பினால் திருவருளை மறக்க நேருங்கால், உறங்குபவனை யெழுப்புதல் போல் மெய்பொடிப்ப மயிர்சிலிர்ப்பக் கண்ணீர்சொரி விக்கும் இனிய அடைமொழிகள் சார்ந்த குமாரக்கடவு ளது திருநாமங்கள் அடிக்கடி ஒலித்துநிற்கும்.

இந்நூலாசிரியர் காஞ்சீபுரத்திலே குமரகோட்டத் தருச்சகராயிருந்த காளாத்தியப்பசிவாசாரியரது தவப் புதல்வர். அவர் இயல்பாகவே அன்பும் அருளும் நிறையப்பெற்றவர். தென்மொழியும் வடமொழியும் நன்கு கற்றுத் தேவார திருவாசகங்களையும் வேதா கமங்களையும் ஓதி உணர்ந்தவர். இவர் ஆசாரிய அபி டேகம்பெற்றுக் குமரகோட்டத்திலே சுப்பிரமணியப் பெருமானைப் பூசைசெய்துகொண்டுவந்தபோது ஓர் இரவு கந்தபுராணமாகிய இந்நூலைச் செய்யவேண்டு மென்ற கருத்துத் திருவருளால் அவர்க்குண்டாயிற்று. அதன்பின் ஒவ்வொருநாளும் பூசைமுடிந்தபின் நூறு நூறு பாட்டுப் பாடி அக்கவிகளைச் சுப்பிரமணியப்பெரு மானது திருமுன்னிலையிலே வைத்து அவர் வீட்டுக்குச் செல்வது வழக்கமாயிருந்தது. சிலநாட்களிற் காலை யில் ஏடெடுக்குங்காற் சில திருத்தங்கள் காணப்பட் டன. இங்ஙனம் முருகக்கடவுளினது திருவருள் பதி ந்த நூலாயினும் அது முறைப்படி அரங்கேற்றப்பட் டது. தமிழ்நாடெங்கு முள்ள சிவனடியார்கள் இந் நூலை அன்புடன் ஓதியுங் கேட்டும் பேரானந்தமடை ந்துவந்தனர். கச்சியப்பசுவாமிகள் பின்னருஞ் சில காலமிருந்து குமாரக்கடவுளினது திருவடிகளையடைந் தனர். இந்நூல் ஆயிரம் ஆண்டுகளின்முன் இயற்

றப்பட்டதென்பது பின்வருஞ் செய்யுளாற் பெறப்படும்.

வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை கொண்டோன்
போதநிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ னானோன்
வாதமுறு புலவர்குழா மகிழ்ந்து போற்ற
மதிமலிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேலா
யிலகுகந்த புராணமரங் கேற்றி னானே.

---

உ

சிவமயம்.

# கந்தபுராண விளக்கம்.



காப்பு.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

இதன்பொருள்:—விளங்குகின்ற பத்துத்திருக்கைக ளேயும் ஐந்துதிருமுகங்களேயுமுடைய சிவபெருமானது தேர்க்குச் சில்லாயிருந்த சூரியன் வட்டமான ஒளி பொருந்திய இரத்தினமாக அமைந்திருக்கப்பெற்ற திருவயிற்றினையுடைய விகடசக்கரவிநாயகரது மெய்ஞ் ஞானமாகிய திருவடிகளை வணங்குவாம்.

இதிலே விநாயகக்கடவுளது விசுவரூபந் துதிக்கப் படுகின்றது. விசுவரூபமாவது உலகங்களெல்லாவற் றையுந் தாங்கி நிற்கும் வடிவம். எவரிலே உலகங் கள் தங்கி நிற்கின்றனவோ அவர் பரமபதி. ஆதலால் விநாயகர் பரமபதியாம். விநாயகர் என்ற சொல்லுக் குப் பொருளு மிதுவே. இதனுல் விநாயகக்கடவுளுக் கும் சிவபிரானுக்கும் வேற்றுமையின்மை காட்டப் பட்டது. சூரியன் சிவபிரானது விசுவரூபத்திலே தேர்ச்சில்லாகவும் விநாயகரது விசுவரூபத்திலே ஆப ரணமாகவும் விளங்கியமை இச்செய்யுள் குறிக்கின்றது.

சூரியன் சிவபெருமானது தேர்ச்சில்லாய கதை:—

முன்னொருகாலத்திலே மூன்று கொடிய அசுரர்கள் தேவர்களுக்குப் பெருந்துன்பத்தை விளைத்து வந்தனர். அவற்றைப் பொறுக்கமாட்டாத தேவர்கள் சிவபெருமானிடத்தில் வந்து முறையிட அவர் அவ்வசுரருடைய கோட்டைகளை யழிக்கத் திருவுளங்கொண்டு உலகத்தைத் தேராகவுஞ் சூரியசந்திரரைச் சில்லாகவும் மேருமலையை வில்லாகவும் திருமாலை யம்பாகவுங் கொண்டருளினர். அப்போது திருமால் அக்கோட்டைகளை யழிப்பது தம்முடைய வல்லமையேயென்று மனதிற் பெருமைகொண்டனர். அதைக்கண்டு சிவபெருமான் புன்முறுவல் செய்தருளினர். அத் திருநகையினாற் கோட்டைகள் சாம்பராயின. விஷ்ணுவாகிய அம்பு எய்யப்படாதிருந்தது. இதை

"சாம்பு கண்டில மேகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரமுந் தீபற
ஒன்றும் பெருமிகையுந் தீபற"

என்னுந் திருவாசகத்திற் காண்க. மூன்று கோட்டைகளென்றது ஆன்மாக்களது மூன்றுமலங்களின் காரியமென்று திருமூலநாயனார் பாடியருளினார்.

அப்பணி செஞ்சடை யாதிபு ராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே.

ஆதலால் முப்புரங்களைச் சிவபெருமான் எரித்தல் ஆன்மாக்களிலுள்ள மலங்களின் வன்மையைக் கெடுக்கும் அருளலாகிய தொழிலாம். கோட்டைகள் மலங்

களின் காரியமாயின் அவைகளை ஆண்ட அசுரர்கள் மும்மலங்களாதல்வேண்டும்.

சுப்பிரமணியர் காப்பு.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி, ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி காஞ்சி, மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யண்ணன், சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

ஆசிரியர் தாம் வழிபடுகடவுளாகிய முருகக்கடவுளது காப்பை வேண்டி அவரது உருவத்திருமேனியைத் தியானித்து அதனை இச்செய்யுளாற் சித்திரித்து அப்பெருமானது தியானமுறையினை எமக்குத் தந்தருளினர்.

நூற்பயன்.

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோதுவோரே.

இ-ள்:— இந்நூலை யன்பாக வோதுவோருங் கேட்போரும் இப்பிறவியில் நல்வாழ்வைப் பெற்றுப் பின்னர்ச் சிவலோகத்தை யடைவர். எப்படியெனில் முருகக்கடவுளது திருவருள் அசுரரது வலிமையைக் கெடுத்ததுபோல அவரது அருட்கதையாகிய கந்தபுராணந் தன்னைக்கேட்போரது தீயவாசைகளின் வலிமையைக் கெடுக்கும். அதனாலே அவர்கள் தமது ஐம்பொறிகளை ஆள்பவராகிச் சிவபுண்ணியத்தைச் செய்து இம்மையிற் பெருமகிழ்ச்சி யுடையராக வாழ்ந்து பின்னர்ச் சிவபதத்தைச் சேர்வர்.

## கடவுள் வாழ்த்து.

### சிவபெருமான்.

திருவந்ததொல்லைப் புவனத்தொடு தேவர்போற்றிப்
பெருவந்தனைசெய் தறிதற்கரும் பெற்றியெய்தி
அருவந்தனையு முருவத்தையு மன்றிநின்றான்
ஒருவன்றனது பதந்தன்னை யுளத்துள்வைப்பாம்.

இ-ள்:—மனிதரும் தேவரும் வழிபட்டறிதற் கரியவரும் அருவம் உருவம் அருவுருவமாகிய வடிவங்களுக்கப்பாற்பட்டவரும் ஒப்பற்றவருமாகிய சிவபிரானது திருவடிகளை உள்ளத்திலிருத்துவாம்.

இதிலே கடவுளினியல்பான தன்மை கூறப்பட்டது. இதை

"சிவனருவுருவுமல்லன் சித்தினோடசித்துமல்லன், பவமுதல்யோகபோகம் பண்ணிடுவானுமல்லன், தவமுதலியோகபோகந் தரிப்பவனல்லன்றானே, இவை பெறவிவைந்துமொன்று மிவைந்திடாவியல்பினானே"

என்பதிலுங் காண்க. கடவுளின் தன்மைகளை ஒருவாறறிதல் புராணங்களின் மெய்க்கருத்தைத் தெளிதற்குப் பெருந்துணையாகும். இத்தன்மைகளை ஆசிரியர் கடவுள்வாழ்த்தில் வைத்து விரிக்கின்றார். முதலிற் கடவுளின் இயல்பான தன்மையும் பின்னர் அவரது திருவருள் வடிவங்களின் தன்மையுங் கூறப்படுகின்றன. புராணங்களிற் பெரும்பாலும் பேசப்படுவன திருவருள் வடிவங்களே. இதை

உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற்றோன்றுங், கருமமு மருளரன்றன் கரசர ணாதிசாங்கந், தருமரு ளுபாங்கமெல்லாந் தானரு டனக்கொன்

றின்றி, யருளுரு வுயிருக்கென்றே யாக்குவ னம லென்றானே.

என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்திற் காண்க.

ஊனாகியூனு ளுயிராயுயிர் தோறுமாகி
வானாதியான பொருளாய்மதி யாகிவெய்யோன்
றானாகியாண்பெண் ணுருவாகிச் சராசரங்க
ளானான்சிவன்மற் றவனீள்கழற் கன்புசெய்வாம்.

இ-ள்:—உடலாகியும் உயிராகியும் உயிருக்குயிராகியும் ஆகாயம் முதலிய ஐந்துபூதங்களாகிய ஏனைய பொருள்களாகியும் சூரியர் சந்திரர் முதலிய உலகங்களாகியும் உயிர்களுள் ஆண்பெண் சரம்அசரம் என்னும் வேற்றுமைகளையாக்கும் தன்மைகளாகியும் நிற்குஞ் சிவபெருமானது திருவடிகளை அன்போடு வழிபடுவாம்.

இதிலே சீவர்களின் பகுதிகள் உடலெனவும், உயிரெனவும், உயிர்க்குயிரெனவும் மூன்றாகக் கூறப்பட்டன. புறப்பொருள்களும் உலகங்கள், அவற்றிலுள்ள அறிவில்பொருள்கள், அவற்றின் குணங்களென மூன்றாக வகுக்கப்பட்டன. சிவபெருமான் இவ்வறுவகைப் பொருள்களிலும் வியாபகமாய் அவற்றின் வேறறவும் நிற்பரென்பது கருத்து.

முதற்செய்யுளின்கண் கடவுள் அறிதற்கரியரெனவும் மனம்வாக்குக் கெட்டாதவரெனவுங் கூறியதினால் அவரை அறிதலும் வழிபடலும் இயலாவென்னும் மயக்கமுண்டாகத்தக்கது. அம்மயக்கத்தை நீக்குதற்காக அவர் எங்குமுள்ளவரென்றும், அவர் எம்மிலிருந்து சேய்மையானவரல்லர் என்றும், அவர் எம்மிலுள்ளவரென்றும், எம்மை அவராகப் பாவித்தலுங்

தகுமென்றும், அவரை நாடுதல்வேண்டுமாயின் அவர் அரியரல்லரென்றும் இக்கவி கூறுகின்றது.

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையு
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம்.

இ-ள்:—பிறப்புமிறப்பும் பெயருஞ் செய்கையும் மறப்புந்நினைப்பும் வடிவமும் வெறுப்பும்விருப்பும் மற்றைய உயிர்க்குணங்களும் சாராத சிவபெருமானுடைய திருவடிகளை எமது தலையிலே சூடுவாம்.

முற்செய்யுளிற் கடவுள் உயிராய் நிற்பரெனக் கூறியதாற் கடவுட்கும் உயிர்கட்கும் வேற்றுமையாதென்று வினவுவார்க்கு விடையாகக் கடவுளுக்கும் ஆன்மாக்களுக்குமுள்ள வேறுபாடு இதிற் கூறப்படுகின்றது. இவ்வாய்மையும் புராணக்கதைகளை விளக்குதற்கின்றியமையாததாம்.

பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.

இ-ள்:—பிரம விஷ்ணுக்களுந் தேடி அறியமாட்டாத தலைமைபொருந்தியவரும் பிரணவ வடிவினருமாகிய சிவபெருமானது திருவடிகளைத் துதிப்பாம்.

இதுமுதல் மூன்று பாட்டுக்களாற் சிவபிரானைத் தியானித்தற்குரிய வடிவங்கள் கூறப்படுகின்றன. இக்கவியிலே பிரணவவடிவந் துதிக்கப்படுகின்றது. பிர

ணவ வடிவம் விநாயகக்கடவுளுக்குச் சிறப்பாகவுரியது. சுப்பிரமணியப் பெருமானுக்கு மிவ்வடிவ முண்டென்பதை

"ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங் கண்டு, தூங்கார் தொழும்பு செய்யாரென் செய்வார் யம தூதருக்கே" என்னும் கந்தரலங்காரத் திருப்பாசுரத்திற் காண்க. இதனாலே விநாயகர் சுப்பிரமணியர் சிவபிரான் முதலிய பெயர்கள் யாவும் ஒருபொருளையே குறிக்குமென்பது பெறப்படும். இவ்வாய்மையையே "ஒருவர்தாம் பலபேருளர் காண்மினே" என்னும் அப்பர் மூர்த்திகள் திருவாக்கு விளக்குவது.

பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் தூற்றுழி
யங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்.

இ-ள்.—பிரமவிஷ்ணுக்கள் தாமே முதற்கடவுளென்று நினைத்துப் போர்செய்தபோது அவர்களது அறியாமையைப் போக்கற்காகச் சோதிவடிவமாய் எழுந்த சிவபெருமானது திருவடிகளைத் துதிப்பாம்.

பிரணவத்தின் முதல்விருத்தியாகிய சிவதத்துவம் நாதமெனப்படும். எழுத்தொலிகளுக்கு வரிவடிவங் கற்பிக்கப்பட்டமைபோல் அருவமாகிய நாதத்துக்குத்§ தீச்சுடர்வடிவங் கற்பிற்கப்படும். அந் நாதவடிவங் கண்டு துதிக்கப்படுகின்றது. நாதம் ஞானமாதலால் பிரமவிஷ்ணுக்களதறியாமையைத் தீர்த்தற்குப் பொருத்தமான திருமேனியென்பதறிக.

§ "நாதோதீப சிகாக்றுதி" என்று வாயுசங்கிதை கூறும்.

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றுய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம்.

இ-ள்:—காண்பவன், காட்சிப்பொருள், காட்சி, காட்டுவோன் ஆகிய நான்குமாய், ஆன்மாக்களின் பாசங்களை நீக்கிப் பேரின்பத்தைக் கொடுப்பவருமாய சிவபெருமானது ஐந்தொழிலியற்றும் திருநடனத்தைத் துதிப்பாம்.

ஒருவன் ஒரு பசுவைக் காணும்போது, காண்பவன் அவன். காட்சிப்பொருள் பசு. காட்சி அது பசு என்னுமறிவு. ஆன்மா சிவத்தைக் காணுங்கால் அது சிவமாதல் வேண்டும். அப்போது காண்பவனாகிய ஆன்மாவும் காட்சிப்பொருளும் காட்சியும் காட்டுவோனும் சிவமேயாம்.

"மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத வின்பமதன் சொல்."§

இவ்வாறு செய்யுட்களுள், முதற்செய்யுள் "உளத்துள் வைப்பாம்" என்று கடவுளை நினைத்தலையும், இரண்டாவது "அன்புசெய்வாம்" என நினைத்தலால் வரும் அன்புகொள்ளுதலையும், மூன்றாவது "சென்னி சேர்த்துவாம்" என அன்புகொள்ளுதலினால் வரும் காயவழிபாட்டிற் சிறந்ததாகிய தலையாற்றொழுதலையும், நான்காவதுமுதல் ஆறாவதுவரையும் வாயினாற்றொழுதலையுங் குறிக்கின்றன. அவற்றுள்ளும் நான்காவது "தலைமையெய்தியே" என்றதனால் கடவுளின் சத்தாகிய தன்மையையும், ஐந்தாவது "அங்கியாயெழும்"

§ திருவருட்பயன். (அ-ம் அதி - கூ)

என்று சித்தாகிய தன்மையையும், ஆறுவது "நயம் புணர்த்தும்" என்று ஆநந்தத் தன்மையையும் விசேடமாகத் துதிக்கின்றன.*

## நாட்டுப்படலம்.

காவியங்களைச் செய்வோர் நாடுநகரங்களின் தன்மையைச் சொல்லுதல் வழக்கம். இது கதைவிளங்குதற்குத் துணையாவதுமன்றி அவ்வக்காலங்களில் ஊர்களிருந்த நிலைமையையுங் காட்டும். நாட்டின் சீரும் அங்குள்ள மனிதரது கல்வி தொழில் வாழ்க்கை மேன்மை முதலியனவுமே பழைய சரித்திரங்களில் நாமறியற்பாலன.† இந்நூலாசிரியர் நாட்டுத் தன்மையைச் சொல்லத்தொடங்கி, அதன் சிறப்புக்கின்றியமையாததாகிய ஆற்றினது பெருமையை முதற்கட் கூறுகின்றனர்.§ அவருடையநாடு தொண்டைநாடு. அங்குள்ள ஆறு பாலியாறு. நகரம் காஞ்சிமாநகரம். ஆசிரியர் வருணனைகளிலே கடவுட்பற்றை வளர்ப்பனவாகிய அரிய உண்மைகளையும் அடியார் சரித்திரங்களையும் உயர்ந்த

---

* சிவவணக்கத்தின்மேல் உமாதேவியார், விநாயகர், வைரவர் வீரபத்திரர், சுப்பிரமணியர் (திருப்பரங்குன்று. திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை, குமர கோட்டம் ஆகிய ஒவ்வொருகோயிலுக்கும் ஒவ்வொன்று) திருநந்திதேவர், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருத்தொண்டர், சரசுவதியாகிய இவர்களுக்கும் வணக்கங் கூறப்படுகின்றது.

†மேல்நாட்டுச் சரித்திரகாரர் அரசர்களின் பேரையும், அவர் மனைவி மக்கள் பேரையும், கலகங்கள் போர்க்களங்களின் விவரங்கள் தேதிகளையுங் கூறுதலே தமது கடனென நெடுநாட் கருதிவந்தனர். தமிழ்ப்புலவரது முறையே தக்கதென இவர்களறிந்தது சின்னாட்களின் முன்னேயாம்.

§திருவள்ளுவநாயனாரும் கடவுள்வாழ்த்தின்பின் என்னாட்டுக்கும் வளத்தைத் தருவதாகிய மழையின் சிறப்பைக்கூறினர்.

நீதிகளையும் சித்திரிக்கும் வழக்கினையுடையார். அவற்றுட் சிலவற்றை எடுத்துக்காட்டுவாம்.

பூட்டு கார்முகத் தன்னொடுந் தோன்றிய புயல்வா
யூட்டு தண்புன னந்தியங் கிரிமிசை யுகுத்தல்
வேட்டு வக்குலத் திண்ணனார் மஞ்சனம் விமலற்
காட்டு கின்றதோர் தனிச்செயல் போன்றுள தன்றே.

இ-ள்:—வானவில்லோடு தோன்றிய முகில் குளிர்ந்த நீரைத் தன்னுடைய வாயிலிருந்து நந்திமலைக்குமேலே சொரிதலானது, வில்லைத்தாங்கிய கையினோடு கண்ணப்பநாயனார் தமது வாயிலிருந்த நீரைச் சிவலிங்கத்துக்கு மேலே சொரிந்ததை யொத்தது.

வானவில்லுக்குக் கையிலிருந்த வில்லும் முகிலுக்குக் கண்ணப்பநாயனாரும் நந்திமலைக்குச் சிவலிங்கமும் உவமைகளாயின.

தேக்கு தெண்டிரைப் புணரிநீர் வெம்மையைச் சிந்தி
யாக்கி வாலொளி யுலகில்விட் டேகலா லடைந்தோர்
நீக்க ரும்வினை மாற்றிநன் னெறியிடைச் செலுத்திப்
போக்கின் மேயின தேசிகர்ப் பொருவின புயல்கள்.

இ-ள்:—முகில்களானவை கடல்நீரிலுள்ள உப்பை நீக்கி மின்னலொளியை வீசி நன்னீரைச் சொரிந்து நாட்டை வாழவைத்தலால், மாணாக்கரிலுள்ள வினைகளைப் போக்கி நல்லறிவைக் கொடுத்துச் சிவாநந்தப் பெரும்பேற்றை அடைவித்து ஆன்மாக்களை வாழ்விக்குந் தேசிகரை யொத்தன.

உதிருகின்றசிற் றுண்டிகொண் டொலிபுனற் சடைமேன்
மதுரை நாயகன் மண்சுமந் திட்டமா நதியின்
முதிரு,முத்தமிழ் விரகன தேடென மொய்ம்மீ
னெதிர்பு குந்திடப் போவது பாலியா மியாறு.

இதிலே சிவபெருமான் மண்சுமந்த திருவிளையாடலும் சம்பந்தசுவாமி சமணரை வாதில்வென்ற அற்புதமும் பாராட்டப்பட்டன. அன்றியும் அக்கதைகளை அறியாதார் பேதையரென்பதும் உணர்த்தப்படுகின்றது. ஒருவனைப்பற்றிப்பேசும்போது அவனுடையபேரை அறியாதார்க்கு அவனது பெருஞ்செய்கைகளைச்சொல்லி அவனைக் காட்டுவதுண்டு. அதுபோல வைகையாற்றின் பேரை யறியாதாரும் சிவபெருமான் மண்சுமந்ததை அறிந்திருப்பரென்று கருதுமாறு வைகையாறென்னாது சிவபெருமான் பிட்டுக்கு மண்சுமந்த ஆறென்று ஆசிரியர் குறித்தனர்.

சம்பந்தசுவாமிகள் சமணரை வாதில்வென்ற கதை உவமானத்துக்காக ஓதப்பட்டது. உவமானம் உவமிக்கப்பட்ட பொருளினும் நன்கறியப்பட்ட பொருளாதல் வேண்டும். உதாரணமாகக் கொக்கினது நிறத்துக்கு உவமானம் பால். ஏனெனிற் சிறுகுழந்தைகளும் பாலையறிவர். மீன்கள் ஆற்றில் எதிரேறிச் செல்லும் வழக்கத்தை யாவரும் அறிவர். ஆதலால் சம்பந்தசுவாமி வைகையாற்றிலே இட்ட ஏட்டைப்பற்றிய கதை இதினும் நன்ருகச் சைவர்கள் யாவரும் அறிவரென்பதை ஆசிரியர் உணர்த்துகின்ருர். இக்கதையை அறியாதார் சைவர்களல்லரென்பது முடிபு. இனம்பற்றிச் சிவனடியார்களது சரித்திரங்களும் சிவபிரானது திருவருட்செயல்களும் யாவருமறிதல்வேண்டுமென்ற பெருங்கடன் எல்லாச்சைவர்களிலுஞ் சுமத்தப்பட்டது.

**பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலி**
**ளுட்டிய நிமலன்மு னந்தி நீரிடை**
**மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற்**
**கோட்டியர் தடந்தொறுங் குவளை பூத்தவே.**

இ - ள்:—திருவாரூரிலே சிவபெருமானது திருமுன்னிலையிலே நமிநந்தியடிகள் தண்ணீரிலேற்றிய விளக்கைப்போல நீர்நிறைந்த குளங்களிலே செங்கழுநீர்ப்பூக்கள் விளங்கின.

விளக்குநீர் குளத்துநீருக்கும் விளக்குச்சுடர் பூவுக்கும் உவமை. குளங்களிலே செங்கழுநீர்ப்பூவைப் புலவர்கள்யாவருங் கண்டிருப்பர். ஆயினும் இவ்வரிய உவமானம் வேறொருவருக்குந் தோன்றாது கச்சியப்பசுவாமிகளுடைய திருவுள்ளத்தில் மாத்திரந் தோன்றியது. அவருடைய பேரறிவும் அடியார்பத்தியுமப்படியிருந்தன.

அந்நாட்களிலே நாடுகளிலும் நகரங்களிலும் சைவர் சைவசமயத்தை முறைப்படி அநுசரித்துவந்தனரென்பது புராணங்களாலினிதுபெறப்படும். அவர்கள் சைவத்தின் நான்குபாதங்களாகிய சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் இவற்றுள் ஒன்றில் நின்று சற்றேனும் வழுவாமல் ஒழுகிவந்தனர். "நிலையிற்பிரியேல்" என்னும் முதுமொழியை அக்காலத்தவர் எவருங் கடந்திலர். சமயஒழுக்கம் பிறப்பொழுக்கம் நிலையொழுக்கங்களினின்றும் வழுவிய மேல்வருணத்தார் அந்நாட்களிலே இழிகுலத்தவராகிய பஞ்சமரெனப் பட்டுவந்தனர். அம்முறைப்படி பார்க்கில் இக்காலத்திற் பஞ்சமராகாதார் மிகச்சிலரேயாவர்.* பொய்

---

* இக்காலத்திற் சைவ அநுட்டானங்களுள் ஒன்றையேனும் முறைப்படி அநுசரிப்பாரைக் காண்பது எளிதன்று. சைவ சமயத்தின் பெருமையை இக்காலச் சைவர்களது வாழ்க்கையால் அளத்தல் முறையாகாது. சமயோசித நடையைப் பேணும் மேனாட்டு நாகரிகம் சைவ வாழ்க்கையைக் கொள்ளை கொண்டது.

பேசுதல் பொருந்துமெனிற் பொய்பேசலும், சுடன்க ளைக் கைவிடுதல் வேண்டுமெனில் அவற்றை விடுதலும் உலகாயதமுறை. எத்துணைத் துன்பம் நேரினும் நெறி தவறாமையே சைவக்கொள்கை. முறைப்படி நடக்கும் போது துன்பம் உண்டாயின் அத்துன்பம் முன்செய்த தீவினையின் பயனெனக்கொண்டு அதனை யநுபவித்தலே தக்கது. இதுவே அக்காலத்தவரது வாழ்க்கை. உலகாய தத்தால் விஷயசுகப்பற்றுமிக்கு நல்லொழுக்க வரம்பி றத்தலும் போலிநடையும் அக்காலத்திலே அறியப்படா மலிருந்தன. இதற்குப் புராண இதிகாசங்கள் தக்க சான்றுகள்.

நாட்டி யச்செயல் யாவையுஞ் சிவனது நடனம்
பாட்டி சைத்திறம் யாவையு மன்னதே பதியோர்
கேட்டி ருப்பன யாவையு மவனிசைக் கேள்வி
கூட்டம் யாவையு மன்னவன் தொண்டுசெய் கூட்டம்.

தூங்கு குண்டிகை யருகுறக் காலெதிர் தூண்டி
யோங்கு நாசிமேல் விதிமுறை நயனங்க ளுறுத்தி
யாங்கொ ராசனத் திருந்தர னடியகத் தடக்கிப்
பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பலவால்.

(திருநகரப் படலம்-சச, சரு)

இவற்றின் பொருள்:—காஞ்சிமா நகரத்திலே நடை பெறும் கூத்துகளெல்லாம் சிவபெருமானிலே கொண்ட பேரன்பா லுண்டாகும் கூத்துகளாம். சிறந்த இசை யோடு பாடப்படும் பாட்டுகள் யாவும் அவருடைய தோத்திரங்களே. அங்குள்ளார் கேட்குங்கதைகளெல் லாம் அவருடைய பெருமைகளை விளக்குங்கதைகளே. அங்குள்ள கூட்டங்களெல்லாம் சிவனடியார் கூட்டங்

களேயாம். சிவயோகிகள் தமது சுவாசத்தை அடக்கி மூக்குநுனியைப் பார்த்துக்கொண்டு ஆசனத்திலிருந்து சிவபிரானது திருவடிகளை உள்ளத்திலிருத்தி மேலான சிவபுண்ணியமாகிய சிவயோகத்தைச் செய்யும் சாலைகள் பலவுள.

இச்செய்யுள்களிலிருந்து அக்காலத்திருந்தோருட் பெரும்பாலார் சரியாமார்க்கத்தையும் மற்றையோர் கிரியா யோகங்களையும் அநுட்டித்தனர் என்பது புலப்படும்.

நமது முன்னோர்கள் எங்ஙனம் அறிவுநூலாராய்ச்சியில் மிகச் சிறப்புற்று விளங்கினரோ அதனை ஒப்பவே உலகநூல் ஆராய்ச்சியிலும் மிகச் சிறந்து விளங்கினர். இதனை அறியாதார் சிலர் நமது சைவ முன்னோர் உலகநூலறிவும் அதுபற்றிய வினைத்திறனும் பெற்றிலாரென மயங்கித் தமிழ்நூல்களிற் காணப்படும் யந்திரத்தேர்கள் படைக்கலங்கள் முதலியன புலவராற் புனைந்துரைக்கப்பட்டனவென்று கூறிவந்தனர். இக்கருவிகளை இந்நாட்களிற் சில மேனாட்டாராலியற்றப்பட்டதைக் கண்டு தமது வெள்ளறிவின் இழிவை நோக்கித் தலைகுனிகின்றனர். ஆகாயத்தில் யந்திரத்தேர்களினின்று பெரும்போர் செய்தல் இப்புராணத்திற் பலவிடங்களிலும் சொல்லப்படுகின்றது. இக்காலத்தார் கனவிலும் நினைத்தற்கரிய செயல்களும் பொருள்களும் தொண்டைநாட்டி லிருந்தமையைப் பின்வருவனவற்று லறிக.

**விடந்தனை யகற்று மொருகலா ருயிர்கண்**
**மெய்ப்பிணி மாற்றிடு மொருக**
**லடைந்தவ ரெல்லா மிமையவ ராக**
**வளித்திடு மொருகல்வெம் படையாற்**

றடிந்திட வேருய்த் துணிபடு முடலஞ்
சந்துசெய் வித்திடு மொருக
னெடும்படை வரினு மவையிரிந் தோட
நிலைபெறீஇ நிற்குமாங் கொருகல்.

அயன்மனைச் சென்றோர் கணவரைப் பிழைத்தோ
ரடிகளை யிகழ்ந்துளோ ரனைவர்
றுயருறு மூகை யாக்குமோர் மன்றஞ்
சோரர்முன் சுழலுமோர் மன்றம்
வியனிறம் பலவாத் தோன்றுமோர் மன்றம்
விஞ்சைகள் வழங்குமோர் மன்றம்
மயல்புரி கின்ற பொழுதொடு திசையின்
மயக்கறத் தெளிக்குமோர் மன்றம்.

[திருநகரப் படலம்-கூஅ, க00]

இவற்றின் பொருள்:—விடத்தை நீக்கத்தக்க ஒரு வகைக் கல்லும் பலவகை நோய்களைத் தீர்க்கத்தக்க கல்லும் நீடிய ஆயுளைக் கொடுக்கத்தக்க கல்லும் கொடிய பாணங்களாற் பிளவுபட்ட உடலைப் பொருத்தத்தக்க கல்லும் அத்திரங்களை விலக்கத்தக்க கல்லும் அங்குள்ளன. பிறர்மனைவியரை விரும்பினோரையும், கணவருக்குத் துரோகஞ்செய்தோரையும், சிவனடியாரை இகழ்ந்தோரையும் ஊமர்களாக்குஞ் சாலைகளங்கிருந்தன. கள்வர்களைச் சுழற்றுஞ் சாலைகளும் அறியமாட்டாதவற்றை அறிவிக்குஞ் சாலைகளும் நேரத்தையும் திசையையும் காட்டுஞ் சாலைகளும் ஆண்டுள்ளன.

## பாயிரப்படலம்.

முன்னொருகாலத்திலே வேதங்களைப் பலவாறாகப் பொருள்கொண்டு பலர் தவறான சமயங்களையும் நூல்களையும் இயற்றிப் பரவச்செய்தனர். இவற்றால் வந்த

மயக்கத்தைத் தீர்த்தற்காகப் பிரமனுந் திருமாலும் சிவபெருமானை நினைத்து வேண்டுதல் செய்தனர். சிவ பெருமான் அவர்களுக்குத் தோன்றியருளினர்.

சிவபிரானை நினைப்பவருக்கு எல்லையில்லாத இன்ப முண்டாகுமெனில் அப்பெருமானது திருவருள் வடி வத்தைக் காண்பவர் பெறும் இன்பத்திற்கும் ஓர் எல்லை யுண்டா என ஆசிரியர் இறைவன் றிருவருட்டிறத்தை வியக்கின்றனர்.

அண்ண லீசன்வ டிவைய கந்தனி
லெண்ணி னெல்லைபி லின்பம்ப யக்குமாற்
கண்ணி னேர்வரு காட்சிய ராயிடி
னெண்ணு மோவவர் தஞ்செய லோதவே.

சிவபிரான் தோன்றியபோது திருமால் அவரைக் கண்டு பெருமகிழ்ச்சியுற்றுச் சொல்லுகின்றார். "உல கங்களிலே யுள்ளவரிற் பலர் தேவரீரைப் பரம்பொரு ளென்றறிகின்றிலர். சிலர் என்னை அல்லது பிரமனைப் பதியெனச் சொல்லுவர். சிலர் தேவர்கள் உமக்கொப்பா னவர் என்பர். சிலர் கடவுளென்று ஒருபொருளில்லை யெனக்கூறுவர். கூடாவொழுக்கத்துக்குத் துணையாய் நிற் றலால் வாமமே மெய்ச்சமயமென்பார் சிலர். இவ்வாறு முறைகேடான சமயங்கள்பல தோன்றி உண்மையை மறைத்து நல்லொழுக்கத்தின் வரம்பை யழித்துவரு கின்றன. இப்பொய்யறிவினின்றும் நீங்கி உயிர்கள் யாவும் தேவரீரது திருவடிகளை யடைதற்காகச் சிறி தருள் புரிக". அதற்குச் சிவபெருமான் "வேதங்களை முறைப்படுத்தவும் அவற்றின் மெய்ப்பொருள்களை யாவ ரும் தெளிதற்காகப் புராணங்களைச் செய்யவுந் தக்க ஒருவன் பராசரமுனிவனுக்குப் பிள்ளையாகப் பிறப்பா

னென்று தெரிவித்தருளினர். அப்படியே பராசரருக்கு ஒருபிள்ளை பிறந்து வேதங்களைத் தானுக உணர்ந்து அவற்றை நான்காக வகுத்து, அவைகளைப் பயிலர், வைசம்பாயனர், சைமினி, சுமந்து ஆகிய நான்கு முனிவருக்கும் முறையே போதித்தனர். இதனுலே இப்பிள்ளைக்கு வேதவியாசரெனப் பேரானது. பின்பு அவர் நந்திதேவரது மாணுக்கராகிய சனற்குமாரமுனிவரிடம் பதினெண் புராணங்களையுங் கற்றுணர்ந்தார்.

இப்புராணங்கள் சிவபுராணமென்றும், பிறபுராணமென்று மிருவகைப்படும். இவற்றுட் சிவபுராணமல்லாதவை புராணத்தலைவரது நன்மைகளை ஏற்றியுங் குறைகளை மறைத்தும் இல்லாதவற்றை உபசாரமாகக் கூட்டியுங் கூறும் இயல்புடையன.

> சொல்லிய புராணமாந் தொகையு ளீசனை
> யல்லவர் காதைக ளனையர் செய்கையுள்
> நல்லன விரித்திடு நவைகள் மாற்றிடு
> மில்லது முகமனு லெடுத்துக் கூறுமே.
>
> (அவையடக்கம் - ௬.)

சிவபுராணங்களோவென்ருல், அணுவளவேனுங் குற்றமில்லாதவை. யாவும் மிகச்சிறந்தவை. அங்குள்ள உண்மைகட்கு வேதங்களே சான்ருகும்.† அவையாவும் உண்மையானவையேயாம். ஆயினும் அவ்வுண்மைகளை யாரும் அறிந்துகொள்ளுதல் சாலவுமரிது. அறிவுடையோர் நுட்பமாக ஆராய்ந்தே அவ்வுண்மைகளை யறியத் தக்கவராவார்.*

---

† புராணக்கதைகளுட் பல வேதங்களிலுள்ளவையாதலாலும் புராணங்களிலுள்ள உண்மைகளு மங்கிருத்தலாலும் வேதங்கள் சான்ருகுமென்ருர்.

* புராணக்கதைகளிற் சிலவற்றிற்கு வெளிப்பொருள் பொருளன்றென்பதும் அவைகள் வேறுண்மைகளைக் காட்டி

*பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைகள்*
*இறையுமோர் மறுவில யாவு மேன்மையே*
*மறைபல சான்றுள வாய்மை யேயவை*
*யறிஞர்க ளுடியே யவற்றைக் காண்கவே.*

(அவையடக்கம் - க0.)

இத்தகைய புராணங்களை வியாசர் சூதமுனிவருக்குச் சொல்லினர். சூதர் முனிவர்கூட்டங்களுக்கு இவற்றைப் பிரசங்கித்துவந்தனர். முன்னொருகாலத்திலே நைமிசாரணியத்து முனிவர்கள் கந்தபுராணத்தைப் பிரசங்கிக்குமாறு அவரை வேண்டினர். அவர் அதற்கிசைந்து அழலிலேபட்ட மெழுகுபோல மனமுருகப் பெருமகிழ்ச்சியடைந்து மயிர்புளகங்கொள்ளக் கண்ணீர் சொரியத் தமது குருவாகிய வியாசமுனிவரைத் துதித்துக்கொண்டு புராணக்கதையைச் சுருக்கிப் பின்வருமாறு சொன்னர்.

"முனிவர்களே, சூரபன்மன் என்ற அசுரன் தம்பியராகிய சிங்கன் தாரகனோடும் மற்றைய அசுரரோடுஞ் சென்று யாகஞ்செய்து சிவபெருமானிடம் வரங்களைப் பெற்றுத் தேவர்களை வென்று பூமியிலே மகேந்திரபுரியில் வாழ்ந்திருந்தான். இவன் தேவர்களை வருத்தியதால் அவர்களைத் துன்பத்தினின்றும் நீக்குதற்காகச் சிவபெருமானுடைய ஆறு திருமுகங்களிலுமுள்ள அக்கினிக்கண்களிலிருந்து ஆறுபொறிகள் தோன்றி ஆறுமுகப்பெருமானயின. அப்பெருமான் தாரகனையும் கிர

---

நிற்பனவாமென்பதும் இதனுற் பெறப்படும். பலாப்பழம் சாப்பிடுவோர் தோலையும் தடலையும் நீக்கி அவற்முற் பொதியப்பட்ட சுளையைச் சாப்பிடுவதுபோல இக்கதைகளாற் பொதியப்பட்ட மெய்ப்பொருளை அறிவதே கற்போர்க்கு முறையாம்.

வுஞ்சம் என்னும் மாயமலையையு மழித்துச் சூரபன்மன் முதலிய அசுரருடைய வலியைக் கெடுத்துத் தேவர்களுடைய இன்னலைத் தீர்த்தருளினர். பின்னர் தெய்வயானையம்மையாரையும் வள்ளிநாயகியாரையும் திருமணஞ் செய்தருளினர்."

இதைக்கேட்ட முனிவர்கள் இக்கதை சாலவு மினிதென வியந்துகூறி இதனை விரித்துச் சொல்லுமாறு சூதமுனிவரை வேண்டினர். சூதர் விரித்துக் கூறுகின்றார்.

## உற்பத்தி காண்டம்.

இக்காண்டம் முருகக்கடவுள் தோன்றிய வரலாற்றைக் கூறுவது. இதிலே உமாதேவியார் மலையரசனிடம் வளர்ந்ததும் சிவபெருமானுக்குத் திருமணஞ் செய்யப்பட்டமையும் முருகக்கடவுள் தோன்றி அவர் செய்தருளிய திருவிளையாடல்களும் கூறப்படுகின்றன.

நன்மணம் புணர்தலும் புதல்வரைப் பெறுதலும் பெருங்காப்பியத்தின் அங்கங்களாதலாற் சிவபிரானுக்குத் திருமணமும் மகப்பேறும் இந்நூலிற் கூறப்பட்டன. இத்திருமணத்தின் மெய்க்கருத்தை அறிஞரே அறியவல்லவர். சிற்றறிவினர் பலவாறு கூறுவர். உலகங்கள்யாவும் அழிக்கப்பட்டபின் உயிர்களினது வினைகள் அநுபவத்திற்குரியனவாகும்போது சிவபெருமான் தமது திருவருட்சத்தியாகிய உமாதேவியாரைக் கொண்டு உலகங்களைப்படைப்பர். அதற்குமுன்தோன்றாது நின்ற சத்தியாகிய உமாதேவியாரின் செயல் இப்படைப்புத் தொழிலினாலே தோன்றுதலால் இத்தோற்றத்தை உமாதேவியார் சிவபிரானோடு சேருவதாகப் பாவனைசெய்தல் தகும். இங்ஙனஞ் சேர்தலாகிய கருத்தை

திருமணமெனச் சிலர்கொள்ளுவர். திருமணத்தின்முன் சிவபிரான் ஞானநிட்டையில் இருந்தருளினரென்பதும் அப்போது பிரமா படைத்தற்றொழிலின்றி இருந்தாரெ ன்பதும் *இக்கொள்கைக்குத் துணையாகின்றன. அன்றி யும் மாணிக்கவாசகசுவாமிகள்

தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ.

என்றும்,

மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை
உலகறியத் தீவேட்டா னென்னுமது வென்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்திலனே லுலகனைத்துங்
கலைநவின்றபொருள்களெல்லாங்கலங்கிடுங்காண்சாழலோ

என்றும் பாடியருளினர்.

திருமணத்தின்பின் முருகக்கடவுள் சிவபிரானது நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றித் திருவிளையாடல் செய்தது படைக்கப்பட்ட உயிர்களின் மலத்தை நீக்குவ தற்கு இன்றியமையாதவராகிய குருமூர்த்தி† உலகத்தி லேதோன்றி அசுரராகிய மலத்தைக் கெடுத்தலை உணர்த் துவதென்பர். மலங்கள் அசுரராகப் பாவிக்கப்பட்ட தைச் சந்தோக்கிய உபநிடதத்திற் காணலாம். குமாரக்

*இனையதோர் காலை முக்க ணெம்பிரான் ஞான போத
முனிவரற் குணர்த்தி வைகு முறையினாற் படைப்பின் றொழித்
தனியொடு வேதா வைகுந் தொன்முறை யவையை நண்ணி
அனையவன் களன்முன் றூழூஉ வளப்பில வுழுத்தி நின்றான்.

†குமாரக்கடவுள் அடியார்களுடைய செயலுக்குத் தக்கதாக இன்பதுன்பங்களை உடனே ஊட்டி நல்வழிப்படுத்துவரென்னும் ஊர்வழக்குக் குருவினுடைய முறைமையை ஒத்திருத்தலும் எண்ணத்தக்கது. குமரக்கடவுள் மலத்தோடு போர்செய்வ ரென்பது "பணிபாசசங்க்ராம" என்று கந்தரலங்காரம் கூறும்.

கடவுள் குருவடிவம் என்பது "அகத்தியனுக் கோத்து ரைக்கும் அருட்குருவாங் குருவே" என்று அருணந்தி சிவமும் "குருவடி வாய்வந்தெ னுள்ளங் குளிரக் குதிகொண்டவே" என்று அருணகிரிநாதருங் கூறியவற்று லறியத்தக்கது.

இந்நூலிற் சூரன்முதலியோரது தாயாகிய மாயை "எவ்வினைகட்கும் முதலானாள்"* என்று சொல்லப்பட்டிருத்தலாற் சூரனுந் தம்பியரும் முறையே பிராரத்தம் சஞ்சிதம் ஆகாமியம் எனக் கொள்வர் ஒருசாரார். வேறொரு சாரார் சூரன் முதலியோர் அசுரப் பிறப்பினரென்றும் அவர்களோடு போர்செய்தது குமாரக்கடவுளுடைய திருவருள்வடிவமென்றுங் கொள்ளுவர். சிவபிரானது திருவருள் வடிவம் "ஏனக்குருளைக்கருளி" யது போலவும் "அடியவட்காகப் பாங்காய் மண் சுமந்தருளிய பரிசு" போலவும், குமாரக்கடவுளது திருவருள் சூரபன்மனைப் போர்செய்யும் முறையாக ஆட்கொள்ள வடிவெடுத்ததெனல் சாலவும் பொருத்தமுடையதாம். இது திருவிளையாட்டேயென்பது சூரபன்மன்யுத்தப்படலத்தும் பிறண்டும் கூறப்பட்டது.

**பொருசமர் விளைப்பான் போலப் பொருக்கெனப்**
**போந்து சூரன், இருவிழி தன்னிற் காண்பா னெளிது**
**தன் வடிவங் காட்டி, யருளது புரிந்தா னென்னி னாதி**
**யங் குமரன் மாயத், திருவிளை யாடல் யார்க்குந் தெரி**
**கில போலு மன்றே.** (உ௪0.)

திருமணத்தை விரித்துக் கூறத்தொடங்கிய ஆசிரியர் அதற்குரிய அங்கங்களாகிய மணம்பேசல் முதலியவற்றைத் தொடர்பாகப் பாடியருளினர்.

---

* காசிபன் புலம்புறு படலம் - ௫உ.

இமயமலைக் கரசனானவன் திருவருட்சத்தியை நேரே பெறுதற்கு விரும்பிச் சிவபிரானை நோக்கி ஒரு தடாகத்தில் நின்று தவஞ்செய்தான். அவனுடைய தவப் பயனாக உமாதேவியார் அத்தடாகத்தில் ஒரு குழந்தையாகத் தோன்றினார்.

மலையரசன் அவரைக்கண்டு பெருமகிழ்ச்சியடைந்து தனது தலையிலே தாங்கிக்கொண்டுபோய்த் தன் மனைவியாகிய மேனையிடம் கொடுத்தான். இருவரும் அம்மையாரைப் பூசித்துவந்தனர். சில ஆண்டு சென்றபின் அவர் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்தனர்.* அங்ஙனம் தவமாற்றும் நாளில் ஒருநாள் பிரமன் புதல்வரான சனகர், சனந்தனர், சனந்தரர், சனற்குமாரர் என்னும் நால்வரும் வேதநூல்களை ஓதி அவைவாயிலாகத் தவமாற்றிப் பின்பு ஆகமங்களின் நுண்பொருள்களை அறிதற்பொருட்டுத் திருக்கைலாசத்துக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் சீகண்டருத்திரரை வழுத்தி "எம்பெருமானே! அருட்கடலே! நடுயாமத்திலே ஒரு கடல்நடுவே காற்றுற் றுக்கப்பட்ட மரக்கலம்போல வேதமென்னும் பெருங்கடலின்கண் பலவகைப் பொருள்களாலுந் தாக்கப்பட்டுத் துறையின்றி மலைகின்றேம். ஆதலால் எமது மயக்கந்தீர எமக்கருளி எம்மை வாழ்வித்தருளுக" என்று வேண்டினர்.

---

*தவமென்று இங்கே சொல்லப்படுவது ஆன்மாக்களை முத்தியடைவிக்கும் சங்கற்பமாம். இதனை

> பத்திமை யெம்வயிற் பழுத்த பண்பினாற்
> சத்தியே நின்னிகர் சகத்தி னில்லைநீ
> இத்திற முயலுத லெல்லை தீர்ந்தநின்
> புத்திரர் வீடுற பொருட்டுப் போலுமால்.

பார்ப்பதிப்படலம் - ரு.

என்னுஞ் செய்யுளிற் காண்க.

இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத் திடைப் பட் டாங்குப், பொருட்பெருங் கடலாம் வேதம் புடை தொறு மலைப்ப விக்காள், அருட்பெருங் கடலே யெய்த் தே மமைந்தில துணர்வி யாங்கள், மருட்பெருங் கட லி னீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்.

(மேருப்படலம் - ரு.)

அப்போது சிவபிரான் ஆகமங்களிற் கூறப்படும் சரி யை கிரியை யோகமாகிய மூன்று பாதங்களையும் போதி த்து முடிக்க அவர்கள் ஞானபாதத்தைப் போதிக்கு மாறு வேண்டினர். அதற்குச் சிவபெருமான் புன்முறு வல்கொண்டருளி ஞானமானது போதிக்கப்படும் பொரு ளன்று; அஃது ஒரு நிலையாகும் என்று சொல்லியருளி ஞானமுத்திரை*யைக் காட்டி ஞானநிலையை உணர்த்தி யருளினர்.

என்னலு நகைத்தி யாது மெதிர்மொழி புரிந்தா னல்லன், பன்னுவ தன்றன் மற்றிப் பரிசினை லிருத்தல் கண்டீர், அந்நெறி யாகு மென்றே யனையவர்க் குணர்த் து மாற்றால், உன்னரும் பாத்தின் மேலா ஞெருசெயல் புரித லுற்றான். (மேருப்படலம் - கக.)

சிவபெருமான் அந்நிலையிலிருந்தருளியபோது ஐந் தொழில் நடவாதொழிந்தது. அப்போது உயிர்கள் தெப் பத்தினின்றும் தவறிக் கடலில் ஆழ்ந்தோரைபொத்து வருந்தின.†

---

*ஞானமுத்திரையாவது சுட்டுவிரல்நுனி பெருவிரல்நுனி யோடு சேர்ந்து மற்றைய விரல்களினின்றும் பிரிந்து நிற்றலாம். சுட்டுவிரல் ஆன்மாவையும் பெருவிரல் சிவத்தையும் மற்றைய மூன்றுவிரல்கள் மும்மலங்களையும் குறித்தலால் இம்முத்திரை யானது ஆன்மா மலங்களினின்றும் விலகிச் சிவத்தைச் சாரும் முறையை விளக்குவதாகும் என்பர்.

†ஐந்தொழிலால் ஆன்மாக்களுக்குண்டாகும் நலம் இதனல் உணரத்தக்கது.

இஃதிவ்வாறாக சூரபன்மன் தேவர்களுக்குச் செய்த துன்பங்களைக் கண்டு இந்திரன் வருந்தி அவற்றை நீக்குமுபாயத்தைக் கேட்டற்காகப் பிரமாவிடம் சென்றான். அப்போது பிரமா இந்திரனைநோக்கி "தாய்தந்தையர் பிள்ளைகளுக்குற்ற நோயைப் பிறரால் (மருத்துவரால்) தீர்ப்பிப்பர். அதுபோலச் சிவபிரான் தேவர்கள்செய்த தீவினையைச் சூரபன்மாவைக்கொண்டு தீர்ப்பித்தருளுகின்றார். எம்முடைய துயரத்தினின்றும் நீங்கிக்கொள்ளுதற்கு நாம் அவருடைய திருவருளைத் துணையாகக் கொண்டு எமது முயற்சியைச் செய்யவேண்டும். ஆதலால் நாம் விஷ்ணுமூர்த்திபிடம்போய்ச் செய்யவேண்டியதை யறிவோம்" என்றார்.

பெற்றிடுங் குரவ ரானோர் பிள்ளைக டம்பா னோயொன், றுற்றிடிற் பிறரைக் கொண்டு முறுதுயர் செய்து தீர்ப்பார், மற்றவர் தம்பா லன்போ வன்கணோ வதுபோ னம்பாற், பற்றிய பவங்க டீர்ப்பான் பரமனு மிவைகள் செய்தான். (மேருப்படலம் - சரு.)

ஆதலி னிறைவ னேமே லருள்செயு மதற்கி யாமுந், தீதற முயலு மாறு சிறிதுள திவற்றை மாயோற், கோதினம் வேண்டுஞ் செய்கை யொல்லையிற் செய்து மென்னா, ஏதமில் கமலப் புத்தே ளிருக்கைவிட் டெழுந்தா னன்றே. (மேருப்படலம் - சஎ.)

அப்படியே அவர்கள் வைகுண்டலோகத்திற்குப் போய் விஷ்ணுமூர்த்தியைத்தொழுது தமது குறைகளைச் சொல்லினர். அதற்கு விஷ்ணுமூர்த்தியானவர் இத்துன்பங்களெல்லாம் தக்கனது யாகத்திலே தேவர்கள் சிவநிந்தைகேட்ட கொடிய பாதகத்தைத் தீர்க்கும் முறைமையாகுயினவென்றும், சிவபிரான் மோனநிலைநீங்கித் தமது

சத்தியைச்சார்ந்து குமாரக்கடவுளைத் தந்தாலன்றிச் சூரபன்மன் அழிக்கப்படானென்றும் மோனநிலையைக்கெடுத்தற்கு மன்மதனை அனுப்புதலே தக்கதென்றும் அவர்களுக்குச் சொன்னார்.

அதைக்கேட்ட பிரமா மன்மதனை நினைக்க அவன் அவர்முன்பு சென்றான். பிரமா அவனைநோக்கி "உன்னுடைய அம்புகளைச் சிவபிரானிலே செலுத்தி அவருடைய மோனநிலையைக் கெடுத்தற்குப் போவாயாக" என்று கூறினார். இதுபற்றி அவர்களுக்குள் ஒரு வாதமுண்டாயது. வாதத்திறமையிற் புராணகாரர் ஒப்புயர்வில்லாதவர். எதிரியுடைய விடையை அவனுக்குமாறாகத் திருப்பும் வன்மையிற் றேர்ந்தவர். அன்றியும் உயிர்களைத் தீயவழியிலே செலுத்துவோனாகிய காமனுடைய வாயிலிருந்து அரிய உண்மைகளைப் பிறப்பிக்கின்றனர்.

பிரமாவுடைய பேச்சைக்கேட்டு மன்மதன் உள்ளங்கலங்கி இரண்டு காதுகளையுங் கைகளாற்பொத்தி இப்பழிமொழியைக் கேட்க எனக்கு நேர்ந்ததே என்று வருந்திச் சிவநாமங்களை உச்சரித்துப் பிரமாவுக்குச் சொல்லுகின்றான்:—"நல்லவரானோர் தம்மையடைந்த கொடியவருக்கும் நல்லறிவைப் புகட்டுவர். தேவரீர் இக்கொடிய சொற்களைச் சொல்லியது என்னிற்கொண்ட வெறுப்பினாற்போலும்! நான் பெரியோர்கள் பலரை மயக்கியதுண்மையே. என்பிதாவாகிய விஷ்ணுமூர்த்தியிலே என் அம்புகளைச் செலுத்தி அவரை இலக்குமி முதலியோரில் மயங்கவைத்தேன். தேவரீரை மயக்க, நீர் சரஸ்வதியை உமது நாவிலிருத்தினீர். மனிதர்களுள் என்னுடைய ஆட்சிக்குத் தப்பினோர் யாருமிலர். ஆயினும் இந்த வல்ல

மை ஏன்னுடையதன்று. சிவபிரானை அற்பமானவர்களாகிய தேவர்களைப்போல நினைத்து இவ்வாறு சொன்னீர். பூக்களாகிய என் அம்புகள் நெருப்புவடிவினராகிய அவர்மேற் சாரத்தக்கவைளா? பஞ்சானது வேகமான சுழல்காற்றுக்கெதிரே செல்லுதல் சாலுமாயின் நான் நின்மலராகிய சிவபெருமானை எதிர்த்துச் செல்லுவேன். அவருடைய ஒரு திருநகையினாலே முப்புரங்கள் எரிந்ததறியீரோ? உம்மைப் பரம்பொருளாக நீர்நினைந்தபோது உம்முடைய தலையொன்று சிதைந்ததறியீரோ? விஷ்ணுமூர்த்தியையும் வெருட்டிய நஞ்சை அவர் உண்டாரல்லவா? இத்தன்மையராகிய சிவபிரானோடு போர்செய்யப்போவோர் உயிரிலே பற்றில்லாதவரன்றி வேறுயாவர்?"

இவற்றைக்கேட்ட பிரமா கவலையுற்றுச் சொல்லுகிறார். "சிவபிரானது பெருமைகளை நன்கு கூறினாய். அவரோடு போர்செய்வது எளிதன்று. ஆயினும் அவருடைய அருளின்றி ஓர் அணுவும் அசையாது.§ அவருடைய அருளில்லையாபின் நீ அவரிடம் போகமாட்டாய்.

---

*இது சிவபெருமானது திரோதானசத்தியின் சமுகத்தினாலாவதாம். இச்சத்தியானது ஆணவம் மூனைத்துநிற்கும்போது அதன் வலியைக் கெடுத்தற்காக அதைத் தொழிற்படுத்தும். அத்தொழிலின் பயனாகிய துன்பத்தை ஆன்மா அனுபவிக்க ஆணவம் வலிகெடும்.

§சிவபெருமானது ஆதிசத்தியினால் உயிர்களுக்கு அறியும் வன்மையும் தொழில்செய்யும் வன்மையும் உண்டாகின்றன. ஆயினும் உயிர்கள் அவற்றைப் பயன்படுத்துதல் உயிர்களைப்பற்றிய மும்மலங்களின் நிலையால் வரையறுக்கப்படும். அவ்வுயிர்களின் செயல்கள் சிவபிரானது செயல்களாகா. நாம் ஒருவனுக்கு நெருப்பைக் கொடுத்தால் அந்த நெருப்பைக்கொண்டு சோறுசமைத்து நற்பயன்பெறுவதும் பிறனுடைய வீட்டையெரித்துத் தீமைசெய்வதும் அவனுடையசெயலன்றி நெருப்பைக்கொடுத்த எமதுசெயலாகா. ஆதலால் பிரமா கூறியது போலிநியாயமாம்.

நீ போனால் உன்னுடையசெயலும் அவருடையசெயலே. முன்னொருகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் போர் செய்தபோது சிவபெருமானுடைய திருவருளினாலே தேவர்கள் வெற்றியடைந்தனர். தேவர்களுட் பலர் அவ் வெற்றிக்குக் காரணம் தம்முடைய வல்லமையேயென்று கூறித் தனித்தனி தம்மைப்புகழ்ந்து செருக்கடைந்தனர். இவர்களுடைய மயக்கத்தைத் தீர்த்தற்காகச் சிவபெருமான் ஓரியக்கவடிவத்தோடு தோன்றியருளினர். அங்குள்ள தேவர்கள் அக்கினிபகவானைப்பார்த்து "அதோ நிற்பவரை அறிந்துவா" என்றனுப்பினர். அவ்வியக்கர் அக்கினியைப்பார்த்து "நீ யாது செய்வாய்?" என்று கேட்டார். அக்கினி "நான் எதையும் எரிப்பேன்" என்றார். அப்போது அவர் ஒரு துரும்பை நட்டு அதை எரிக்கச்சொல்லினர். அக்கினியால் அது எரிக்கப்படவில்லை. வாயுபகவான் அதை அசைக்கமாட்டாமற்போயினர். இதனாலே தேவர்கள் செருக்குநீங்கித் தம்மாலியன்றதொன்றுமில்லையென்பதும் †யாவுஞ் சிவன்செயலே யென்பதுமறிந்தனர்.

செம்மாந்து தற்புகழுந் தேவர்குழு வும்மருள
எம்மான் பிறன்போ லிருந்தோர் துரும்புநிறீஇ
அம்மாதன் செய்கை யனைத்துமெனக் காட்டினனே
நம்மாலு முற்றுஞ் சிலவென்கை நாணன்றே.

(காமதகனம்—சக)

†பின்னர் இந்திரன் அந்த இடத்துக்குப் போகச் சிவபிரான் மறைந்தருளினர். அவன் தியானத்திலிருந்தபோது உமாதேவியார் தோன்றி அப்பெரியார் சிவபிரானேயென்று தெளிவித்தருளினர். இதனாலே பசுபோதத்தாற் சிவபிரான் அறிதற்கரியரென்பதும் திருவருளால் அறியற்பாலரென்பதும் பெறப்படும். (கேந உபநிடதத்திலுள்ளது.)

அன்றியும் யாராயினும் தாங்குதற்கரிய இடர்வந்த காலத்தில் அதைத் தீர்க்குமாறு ஒருவரை இரக்கும்போது அதைத் தீராமல் உயிரை வைத்திருப்பது முறையன்று. அந்த இடரைத் தீர்த்தற்காகத் தம்முயிரை விடவேண்டிவந்தால் இறத்தலே அறமாம். தேவர்கள் யாவரும் சூரபன்மனால் ஆற்றவும் இடர்ப்படுகின்றனர். அதைத் தீர்த்தற்குச் சிவபெருமான் ஒருகுழந்தையை உதவியருளவேண்டும். இதற்கு அவருடைய மோனத்தை நீ நீக்க வேண்டும். இதற்கு மாறு சொல்லாதே."

மன்மதன், "சிவபிரானுக்கெதிராகச்சென்று போர் புரியேன். என்னால் ஆகத்தக்கதைச் சொன்னால் யான் தடையின்றிச் செய்வேன்" என்று மனம் வருந்திச் சொன்னான். பிரமா கோபங்கொண்டு, தாம்சொல்லியபடி செய்யாவிட்டால் மன்மதனுக்குச் சாபமிடுவதாகச் சொன்னான். அதற்கு மன்மதன், "உம்முடைய சாபத்தினாலே என்னுடைய நிலைகெடுதலினும் சிவபிரானால் அழிக்கப் படுவது நன்று. அதனால் நான் ஈடேறுதலுமாகும். நீர் கோபிக்கவேண்டாம். நான் போருக்குப்போகிறேன்," என்றான். பிரமா இதைக்கேட்டு அன்புமொழிகூறி மன்மதனுக்கு விடைகொடுத்தான். அவன் சிவபெருமானது திருமுன்புசென்று அம்புகளையேவ அவருடைய நெற்றிக்கண்ணினொளியினால் அவன் சாம்பரானான்.*

---

*அப்போது திருநந்திதேவர் தமது பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்து மன்மதனையெரித்தது சிவபிரானது நெற்றிக்கண்ணின் பார்வையன்று. அவனைச்சுட்டது அவரிலே அம்புபோடவந்த செய்கையேயென்று கூறினர்.

நுண்ணிய வுணர்வின் மிக்கீர் நுமக்கிது புகல்வ னெங்கோன்
கண்ணுத லுமிழ்ந்த செந்தீக் காமனைப் பொடித்த தன்றால்
அண்ணலை யெய்வ னென்ன வனையவன் துணிவிற் கூறித்
துண்ணென வீண்டு வந்த செயற்கையே சுட்ட போலும்.

(காமதகனம்—கஉ)

பின்பு தேவர்கள் திருக்கைலாசத்துக்குப்போய் சிவபிரானது திருவடிகளைத் தொழுது "சூரபன்மனால் நாமடையும் துன்பத்தை நாங்கள் தாங்கமாட்டோம். தேவரீர்மகாமாயைக்குத்தலைவியாகியஉமாதேவியாரைத் திருமணஞ்செய்து ஒரு புதல்வரைத் தந்து அசுரரை அழிப்பித்து எம்மைக் காத்தருளுக" என்று வேண்டினர். அதற்குச் சிவபிரான் அப்படியேசெய்வோமென்று அவர் களுக்குத் திருவருள்பாலித்தனர். அவர்கள் அவரைத் துதித்து வணங்கிச்சென்றனர்.

சிவபிரான் சனகர்முதலிய நால்வரையும் பார்த்து மோனநிலையிலிருந்து ஞானபாதத்தையனுசரிக்கும்படி கட்டளையிட்டு விடைகொடுத்தருளினர்.

அதன்பின்னர் சிவபிரான் உமாதேவியாரைத் திரு மணஞ்செய்யச் சங்கற்பித்து மணம்பேசும்பொருட்டு சப்தரிஷிகளை மலையரசனிடம் அனுப்பியருளினர்.

மலையரசன் பெருமகிழ்ச்சியோடு அவர்களுடைய கேள்விக்கிணங்கினன். அவன் மனைவியாகிய மேனாதே வியோ சம்மதித்திலள். பெண்ணுடைய தந்தை மணமக னது பெருமையையும், தாய் அவனுடைய குணத்தையும் ஆராய்தல்இயல்பு. ஒத்துவாழக்கூடிய ஒருவனிடம் தான் பெற்ற பிள்ளையைக் கொடுக்கவேண்டுமென்று தாய் விரு ம்புவாள். ஆதலால் மேனாதேவி சொன்னதாவது, "சிவபி ரான் முன்னொருமுறை விவாகஞ்செய்தபோது பெண் கொடுத்த மாமனாரைக் கொல்வித்தவர். இதை நினைக்க எனக்குப் பயமுண்டாகிறது. நாங்கள் எங்கள் பெண்ணை அவருக்குக்கொடோம்." இம்மொழி உற்றுநோக்கத்தக் கது. சிவபிரானுக்குப் பெண்கொடுத்தற்குத் தடைகூற எவராகிலும் கனவிலும் நினைத்தல் கூடுமோ! இத்துணை

அற்புதமான தடையைக் கண்டது ஆசிரியரின் மதிநுட்பத்தைக் காட்டும். அன்றியும் அறிவு அன்பு என்னுமிரண்டனுள் பெண்கள் அன்பிற்கூடி அறிவிற்குறைந்தவர் என்பதையும் விளக்கியவாறு. முனிவர்கள் இதற்குச் சமாதானஞ்சொல்ல, மேனுதேவி "பெண்ணறிவென்பதேயனும் பேதமைவழியன்றோ" என்று தான் சொல்லிய பதர்மொழியை நினைத்து வருந்தினள். மலையரசன் சிவபிரானைத் தங்கள் மகளுக்கு வதுவை செய்வதோடு தானுமவருக்கு அடிமையாதலே தன்னுடைய ஓர் ஆசை என்ருன்.

திருக்கல்யாணம்முடிய, இரதியுடைய வேண்டுகோளின்படி சிவபிரான் மன்மதனுக்கு உயிர்கொடுத்தருளினர். மன்மதன் எழுந்து "என்னுடைய பிழையைப் பொறுத்தருளுக" என்று வேண்டினன். அதற்குச் சிவபிரான் "யாம் உன்னிலே கோபங்கொண்டாலல்லவோ பின்பு கோபந்தணிவதாகும். நீ கவலைப்படாதே மகனே" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

முன்பொடு தோன்று மாரன் முதல்வியோ டிருந்த நாதன், பொன்புனை கமலத் தாண்முன் போந்தனன் ருழ்ந்து போற்றி, என்பிழை பொறுத்தி யென்ன யாமுனை முனியி னன்ரோ, பின்பது தணிவ துள்ளம் பேதுறன் மைந்த வென்ருன். (திருக்கல்யாணம்—அஅ.)

சூரனுல் வருந்திய தேவர்கள் மேருமலையிற் கூடித் தமது துன்பந்துடைத்தற்பொருட்டுச் சிவபிரான் மணமயர்ந்தும் இன்னும் குமரனைப் பெற்றிலரே என்று மனமுளைந்தனர். உளைந்தவர் பின்பு நல்லறிவுதோன்ற அக்குற்றம் தம்முடையதே யென்றும் தம்மையே நோதல் வேண்டுமென்றும் சிவபெருமானிடஞ் சென்றே அத்துன்பத்தைத் தீர்க்கவேண்டுமென்றுந் தெளிந்து கைலாசத்துக்குப் போனர்கள்.

இவறலு மிகலு மின்றி யார்க்குமோர் பெற்றித் தாகி, யவரவர் வினைக ளூடி யதற்படு பொருளை நல்குஞ், சிவனையாம் வெறுத்தல் குற்றஞ் சிறந்தநோன் பியற்றி டாதே, தவறுசெய் தனமென் றெம்மை நோவதே தக்க தென்றார். (திருவவதாரம்—௩)

கைலாசத்திலே சிவபிரானது திருவடிகளைத் துதித்து தமதுதுன்பத்தைத் தீர்த்தருளும்படி அவரை வேண்டினார்கள். அப்போது அவர் அறுமுகங்களுடைய ஓர் திருவடிவத்தைக் கொண்டருளினார். அறுமுகங்களாவன, மேனோக்கியதாகிய ஈசானமும் நான்கு பக்கங்களிலுமுள்ள தற்புருஷம், அகோரம், வாமம், சத்தியோசாதமாகியநான்கும் கீழ்நோக்கியதாகிய பிரணவமுமாம்.* இவ்வாறு திருமுகங்களினின்றும் ஆறு பொறிகள் தோன்றின. அவை சரவணத்தைச்சேர்ந்து ஆறுமுகங்களுடைய வடிவமாயின. சிவபெருமானும் உமாதேவியாரும் அங்கு தோன்றியருளி, உமாதேவியார் குழந்தையை எடுத்துத் திருவருள்வடிவினதும் பரமஞானமுடையதுமாகிய தமது முலையிலுள்ள பாலையூட்டிக் கைலாசத்துக்குக் கொண்டுசென்றனர்.

ஆதி நாயகன் கருணையா யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபால்
ஏதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பினு லருத்தினுள் கௌரி.
(சரவணப்படலம்—உ௩.)

---

*முகத்தி லொன்றதா வவ்வெழுத் துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டில னப்பொருட் டிறனே.
(அயனைச்சிறைபுரிபடலம்—௧௦)

முருகக்கடவுளது பேராகிய "சரவணபவ" என்பது பிரணவமும் பஞ்சாட்சரமுஞ் சேர்ந்த ஆறெழுத்துக்களாம். "ஆறு எழுத்தடக்கிய அருமறைக்கேள்வி" (திருமுருகு—நக்கீரர்). அவருக்குஞ் சிவபிரானுக்கும் பேதமில்லை.

நன்முக மிருமூன் றுண்டா னமக்கவை தாமே கந்தன்
தன்முக மாகி யுற்ற தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற நந்த மூவிரண் டெழுத் தொன்றாய்
உன்மக னுமத் தோரா றெழுத்தென வுற்ற வன்றே.

ஆதலி னமது சத்தி யறுமுக னவனும் யானும்
பேதக மன்றா னம்போற் பிரிவிலன் யாண்டு நின்றான்
ஏதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்.
(திருவிளையாடல்—க௮, க௯.)

ஒருமுறை பிரமா திருக்கைலாசத்துக்குப்போய்த் திரும்பும்போது குமாரக்கடவுளைச் சிறுபிள்ளையென நினைத்து அவரை விழுந்துகும்பிடாமற் போனான். அருட்கடலாகிய முருகக்கடவுள் பிரமாவுடைய செருக்கை நீக்கி நல்லறிவூட்டத் திருவுளங்கொண்டு ஒரு வேதமந்திரஞ் சொல்லும்படி அவனைக் கேட்டருளினர். பிரமா மந்திரங்களுக்கு முதலாகிய பிரணவத்தை உச்சரித்தவுடனே, "நிறுத்து, இவ்வெழுத்துக்குப் பொருளென்ன?" என்று முருகப்பிரான் வினவினர். பிரமாவுக்கு அதன் பொருள் தெரிந்திலதாதலால் அவர் அவனைச் சிறையில் வைத்தார். சிவபெருமான் அவனைச் சிறையில்நின்றும் விடுதலைசெய்யுமாறு கேட்டருள, குமாரக்கடவுள் முதற் சம்மதித்திலர். அதைக்கண்டு சிவபெருமான் அருள் நகைசெய்து மகிழ்ந்தார். சிறுகுழந்தைகள் தந்தையிற்

கொண்ட பற்றின்மிகுதியாற் சொற்கேளாத அருமை யையும் அதிலே தந்தையர் இன்புறு முலகமுறையையும் இது விளக்கியது. பின்பு குமாரக்கடவுள் அவனைச் சிறை யினின்றும் நீக்கியருளினர். பிரமா அறிவுதெளிந்து குமாரக்கடவுள் தனக்குச் செய்த அருளைத் துதித்தான்.

நாதனித் தன்மை கூறி நல்லருள் புரித லோடும்
போதினை யனைய வுன்றன் புதல்வனாற் றியவித் தண்டம்
ஏதமன் றுணர்வு நல்கி யானெனு மகந்தை வீட்டித்
தீதுசெய் வினைகண் மாற்றிச் செய்தது புனித மென்
[றான்.

(அயனைச்சிறைநீக்குபடலம் - ௩௪.)

தேவர்கள் சூரனுடைய கொடுமையைத் தாங்கமா ட்டாதவராய்ச் சிவபிரானிடஞ் சென்று பின்னும் முறை யிட்டனர். சிவபிரான் சூரனை அழிக்கும்படி குமாரக்கட வுளுக்குச் சொல்லியருளினர். கணநாதராகிய வீரவாகு தேவர் முதலிய ஒன்பது வீரரும் பூதகணங்களும் ஏனை யோரும் குமாரக்கடவுளுக்குப் பரிவாரமாயினர். அவர் கள் தாரகனது பதியாகிய மாயை என்னும் நகரத்துக் குப்போய் அவனோடு போர்செய்தனர். வீரவாகுதேவர் ஒழிந்த மற்றயோர் தாரகன்மீதெவிய பாணங்கள் வறுமை மிக்கவன் செல்வனுக்குச் சொல்லிய சொற்கள் போலப் பயன்படாது திரும்பின. வீரவாகுதேவரும் தாரகனும் போர்செய்து அதில் ஒருவரையொருவர் வெல்லமாட்டாமல் நின்றனர். பின்னர் தாரகன் தோற் றவன்போல ஓடிக் கிரௌஞ்சமலையில் ஒளித்தான். வீர வாகுதேவர் அவனைத் தொடர்ந்துசென்று மலைக்குட் புகுந்து அதனால் மயக்கப்பட்டுச் செயலின்றிக்கிடந்த னர். அப்போது குமாரக்கடவுள் அங்கு எழுந்தருளி னர். தாரகன் அவர்மீது தேவப்படைகளைச் செலுத்தி

ஞன். அவைகளெல்லாம் அவரை வணங்கி நின்றன. அப்போது அவன் மாயையினால் வெல்லக் கருதினான். அதையறிந்த குமாரக்கடவுள் வேலாயுதத்தை விட்டுக் கிரௌஞ்சமலையைப் பிளந்து வீரவாகுதேவர் முதலியோரை மீட்டுத் தாரகனைக் கொன்றருளினார். இதைக் கண்ட தேவர் ஆநந்தமடைந்து ஆரவாரித்தனர்.

குமாரக்கடவுள் அவ்விடத்தினின்றும் நீங்கித் தேவகிரியென்னும் மலைக்குப் போய் அங்கே அமர்ந்தருளினார். அங்கே பிரமா விஷ்ணு முதலிய தேவர்கள் அவருக்குப் பூசைசெய்ய விரும்பி அவருடைய உத்தரவோடு பூசை செய்தனர். பின்பு அவர் மண்ணியாற்றங்கரையை யடைந்து அங்கே குமாரபுரி* என்னுந் திருநகரை அமைத்தருளினர்.

இந்திரன் தாரகன் இறந்ததை நினைத்து மகிழ்ந்திருக்கும்பொழுது, சீகாழியிலுள்ள வனதேவதை அவன்பாற் சென்று தன்னிடம் ஒப்புவித்த இந்திராணியின் ஆபரணங்களைத் திருப்பிக்கொடுத்தது. அவ்வாபரணங்களைக் கண்டதும் அவன் இந்திராணியிலே வேட்கைகொண்டான். அவ்வேட்கையானது நெய்சொரிய வளரும் நெருப்பைப்போலெரிந்து அவனைச் சுட்டது. அவ்வருத்தத்தைச் சகிக்காமல் அவன் ஒரு குளிர்ந்த சோலைக்குப் போனான். அக்கொடிய தீயைச் சோலைக்குளிர்ச்சி தீர்க்கத்தக்கதன்று. சந்திரகிரணமும் அவனைச் சுட்டது. அவன் இவற்றிற்காற்றாமல் அலறிப்புலம்பினான். தப்புதற்கு வழியின்றித் துடித்துப் பதைத்துப் புரண்டு வருந்தினான். பின்னர் அவனை வாட்டிய நிலாவைக் கெடுத்துச் சூரியன் உதயமானான். திங்களினது தோல்வியை உல

* இது திருச்சேய்ஞலூர் எனப்படுவது.

கத்திற்குச் சொல்ல வாய்திறந்ததுபோலத் தாமரைகள் விரிந்தன. குமுதங்கள் தமது நாயகன் உடைந்தமையைக் கண்டு சூரியனைக் கைகூப்பி வணங்குவதுபோலக் குவிந்தன.

**திங்க டன்குறை யுணர்த்தவாய் திறந்தென்னச் செய்ய**
**பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவுந்**
**தங்க ணாயக னுடைந்தது நோக்கியே தபனற்**
**கங்கை கூப்பிய திறனென வொடுங்கிய வன்றே.**

(குமாரபுரிப்படலம் - ௫அ.)

சூரியனது ஒளியினாலே இந்திரனுடைய மனதிலிருந்த மயக்கவிருணீங்கிப் பாம்பின்படஞ் சுருங்குவது போல அவனுடைய வேட்கையின்வேகங் குறைந்தது. அவனுக்கு மெய்யறிவு தோன்றியது. அவன் திடுக்கிட்டெழுந்து, "எனக்கிப்படியான மயக்கம் வந்தவாறென்னை! இஃதென்ன பேதைமை!"

**தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந், தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கும், ஏம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனாற், காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்.**

(குமாரபுரிப்படலம் - ௬௨.)

என்றுசொல்லி மனந்தெளிந்து குமாரக்கடவுளது திருமுன்னிலைக்குச் சென்று அவரைத் தொழுதான்.

ஆசிரியர் உண்மைகளைப் போதிக்கும் முறை இதுவே. ஆசைகளுக்கு இடங்கொடுக்கலாகாதென்று நேரே போதிப்பதனாற் பயனுண்டாதலரிது. அவைகளை வெல்லுதற்கு வேண்டிய முறைகளைத் தெரிவித்து அம்முறைகளிலே பற்றுண்டாக்குதலே அவ்வாசைகளைக் கெடுத்தற்கு வழியாம். ஒருவன் கஞ்சாவியாபாரஞ் செய்யக் கருதும்போது அவனுடைய பிதா நேரேதடுத்தல் முறை

யன்று. அயலவனொருவன் கஞ்சாவிற்று ஆறுமாசத்தில் மூன்னூறுரூபா சம்பாதித்து ஏழாம்மாதத்திற் பிடிபட்டு ஐந்நூறுரூபா குற்றங்கொடுத்தானென்றும், அதைப் பொருட்படுத்தாமல் அவன் பின்னும் மூன்றுமாதகம் வியாபாரஞ்செய்து இருநூறுரூபா சம்பாதித்து அடுத்த மாதம் ஆயிரம்ரூபா குற்றமும் ஆறுமாத மறியலும் விதிக்கப்பெற்றானென்றும், அதன்மேல் அது மிகக்கொடிதென உணர்ந்து அதை விடுத்து வேளாண்மைசெய்யத் தொடங்கினானென்றும் தந்தை சொல்லுவாராயின் அவன் கஞ்சாவியாபாரத்தின் கேட்டையுணர்ந்து அதை நடத்துங் கருத்தை விடுவான்.

கச்சியப்பசுவாமிகள் ஆசைகளுட் கொடியதாகிய காமத்தைக் கடிதற்பொருட்டு இந்திரனுடைய நிலையை யெடுத்துக்காட்டினர். அந்த ஆசையானது காதலித்தோரையன்றி அவருடைய ஆபரணம் முதலியவற்றையுங் காணும்போது உண்டாகத்தக்கது என்றும், அப்படியுண்டாகும்போது அது இனிதாகத்தோன்றுமென்றும், அதன்பின்னர் அது அளவிறந்த துன்பத்தை உண்டாக்குமென்றும், அதற்குத் துணையானகாலம் இராக்காலமென்றும், அதனுள்ளும் நிலாப்போதென்றும், அந்த நினைப்புக்கெடும்போது அதனாலுண்டாகிய வேதனையை ஒருவருணர்ந்து அதுகொடிது கொடிதென்று விலக்கக் கருதுவாரென்றும், அதை விலக்கவேண்டுமாயின் ஒரு நல்லபொருளின்மேலே அக்காதல் செல்லவேண்டுமென்றும், அவ்வுத்தம வஸ்துக் குமாரக்கடவுளுடைய திருவடியென்றுங் காட்டினர். இனம்பற்றிப் பொய் களவு முதலியன கொடியனவென்பதும் அவற்றை விலக்கற்கும் அப்பெருமானுடைய திருவடிகளே துணையென்பதுங் கூறியவாறு காண்க.

குமாரக்கடவுள் திருச்சேய்ஞலூரினின்றும், புறப்பட்டுப் பாலைவனம் வழியாகத் திருச்செந்தூரை அடைந்தருளினார். இப்பாலைவனத்தின் வருணனை மிகச்சிறப்புடையது.

இதில் அரிய உண்மைகள் பரந்து நெருங்கிக் கிடக்கின்றன. உண்மைப்பொருள்களைத் தமது அறிவால் உணரமாட்டாத மந்தமதியினர்பொருட்டு ஆசிரியர் அவ்வுண்மைகளை அவற்றுக்கு ஒத்த உவமானங்களுட்பெய்துகாட்டியமுறை வியக்கற்பாலது. அவற்றுட் சிலவற்றைக் கூறுகின்றேம். "தங்கள் பிறவித்துன்பத்தை நீக்கமாட்டாத தேவர்களை முத்திபெறும்பொருட்டு வணங்கும் மனிதரைப்போல, வெப்பத்தைத் தாங்கமாட்டாமற் பறக்கும் பருந்துகளின் நிழலைத் தொடர்ந்து அவ்வனத்துக் கலைமான்கள் ஓடித்திரிந்தன. புறச்சமயங்களிலே விழுந்தவர்கள் சிவபிரானது திருவருள் தோன்றும் போது அறிவு தொழில் இச்சைகள் செம்மைஉறுதல் போல அவ்வெவ்விய வனமானது குமாரக்கடவுள் அங்கு தோன்றியபோது, குளிர்ச்சிபொருந்திய நறுமணங்கமழும் பூஞ்சோலையாக விளங்கியது".

தங்க டொல்பவ மகன்றிலா விண்ணவர் தம்மைத்
துங்க முத்தியின் பொருட்டிறைஞ் சிடுமவர் தொகைபோ
லங்க ணோர்ந்துதம் போலவே வெப்பமுற் றயருங்
கங்க நாடியே நிழலுக் கடைவன கலைகள்.

புறநெ றிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால்
அறிவு மாற்றலுங் குறிகளும் வேறுபட் டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரலால்
நறிய தண்மலர்ச் சோலையா யுவகைநல் கியதே.

(சூரம்புகுபடலம் - ௧0, ௨௩.)

அப்போது குமாரக்கடவுள் திருச்செந்தியைய டைந்து அங்கே யெழுந்தருளியிருந்தார். அவருக்கு இந் திராதிதேவர்கள் பூசைசெய்து அவருடைய திருவரு ளைப் பெற்று அவரைத் துதித்துக்கொண்டு பக்கத்திலே நின்றூர்கள். அப்போது குமாரக்கடவுள் அறியாதார் போலச் சூரனுடைய வரலாற்றைத் தொடர்பாகச் சொல் லும்படி இந்திரனுக்குக் கட்டளையிட்டருளினூர். இந்தி ரன் வாக்கில் வல்லவராகிய வியாழபகவானைப் பார்த்து அக்கதையைக் கூறுமாறு வேண்டினன். வியாழபகவான் குமாரக்கடவுளுடைய திருவடிகளைத் தலையிற் சூடி, "எம்பெருமானே தேவரீர் எல்லாவற்றையும் அறிவீர். ஆதலாற் சூரனுடைய கதையையறியும்பொருட்டுக் கேட் டீரல்லீர். எங்கள் துன்பங்களை நீக்கி இன்பத்தை யுதவு தற்கேயிதைக் கேட்டருளினீர்" என்றுசொல்லிக் கதை யைக் கூறுவானுயினூன்.

---

# அசுர காண்டம்.

---

ஊரி லான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றூன்.

இத்தோத்திரத்திலே குமாரக்கடவுள் போக்குவர வில்லாதவரென்றுஞ் செயலில்லாதவரென்றுங் கூறப்படு தலால் இப்புராணத்திலே அவருடைய திருவருளே பெ ரும்பாலும் அவராகப் பாவிக்கப்படுவதென்பது பெறப் படும்.

முன்னொருகாலத்திலே தேவர்கள் அசுரரைவென்று அவர்களுடைய வலிமையைக் கெடுத்து மேன்மைபெற்றிருந்தனர். இதனாலே அசுரர்கள் கவலையுற்று மனம்வருந்தினர். அக்காலத்திருந்த அசுரராசனுக்குச் சுரசையென்னொரு புதல்வியிருந்தாள். அவளை அசுரரை ஈடேற்றுவிக்கத் தக்கவளென்பதை அசுரகுருவாகிய சுக்கிராசாரியர் கண்டு, அவளுக்குச் சகல கலைகளையும் போதித்து மாயவித்தைகளுமுணர்த்தி மாயையென்று பெயருமிட்டனர். ஒருநாள் அவர் அவளை அழைத்து, "உனது அசுரகுலம் கீழ்நிலையையடைந்துவிட்டது. அதை உயர்த்தத்தக்கவள் நீயே. பேரழகுவாய்ந்த ஓர் வடிவத்தோடு தவசிரேஷ்டராகிய காசிபமுனிவரிடம் போய் அவராற் புதல்வரைப் பெறுவாயாக. அப்புதல்வர்கள் யாகங்கள் செய்து வரங்கள் பெற்று உன்குலத்தை விளங்கச்செய்வர்", என்று சொன்னார். அவளதற்கிசைந்து காசிபருடைய தவச்சாலைக்குப்போய் அங்கே வாசனைகமழுஞ் சோலைகளையும் வாவிகளையும் மண்டபங்களையு முண்டாக்கித் தென்றற்காற்றை வீசச்செய்தனள். இம்மாறுதல்கள் ஐம்பொறிகளையுமடக்கித் தவஞ்செய்துகொண்டிருந்த காசிபருடைய அறிவிலே ஒருவாறு புலப்பட, "இவை யெவ்வாறுண்டாயின" என்றாராயக் கருதி நாலுபக்கமும் பார்த்தார். யாரையுங் கண்டிலர்.

இவ்வாராய்வே அவருடைய நிலையைக் கெடுக்கக் காரணமாயது. ஆராய்வுகள் உலகப்பற்றுடையோர்க்குரியனவன்றித் தவஞ்செய்வோர்க்குத் தக்கவையல்ல. தவஞ்செய்வோர், "எங்கெழிலென் ஞாயிறு எமக்கு" என்ற கருத்துடையராதல்வேண்டும். அன்றியும் ஒருவர் வரம்பினின்று விலகும்போது அவர் எத்துணைச் சேய்மைக்கண்போவரென்பது கணித்தற்கரிது. "குன்றினுச்

சிபிற் றவறலொப்ப" என்றபடி நேரினும் நேரும். வரம் பிலிருந்து ஈரளவேனும் விலகலாகாதென்பது, காசிப ரது அற்ப உசாவுதலால் அவரது தவம் முற்றுகக் குலைந் ததை நோக்க இனிது புலப்படும். காமத்துக்குச் சிறிதே னும் இடங்கொடுக்கின் அதற்குத் தப்புதலரிதென்ப தையு மிதுபோதிக்கின்றது.

இது யாதாகுமென்று நினைத்துப்பார்த்தும் அவ ருக்கு ஒன்றும் புலப்பட்டிலது. இதைக்குறித்து நினை த்ததே தவறெனக்கண்டு, அவர் முன்போலத் தவத்தை த்தொடங்கமுயலலும் மாயை அவருக்கெதிரே தோன்றி னள். அவர் அவளிலே ஆசையுற்றுத் தவத்தை விடுத் து அவள்பாற் சென்றார். அவருடைய தவவலியும் அறிவுங்கெட்டன. அவளும் அவரைக் காதலித்துப் பார் த்தாள். இருவருஞ் சேர்ந்து சூரன், சிங்கன், தாரகன், அசமுகி என்னும் பிள்ளைகளைப் பெற்றனர்.

ஆண்மக்களாகிய மூவருந் தமது தந்தையாகிய கா சிபரை வணங்கித் தாம் செய்யவேண்டியது யாதெனக் கேட்டனர். அப்போது காசிபர் சைவசித்தாந்தத்தை அவர்களுக்குப் போதித்தார்.†

பொருள்கள் பதி பசு பாசம் எனமூன்றும். பதி யானவர் ஐந்தொழில்களையுஞ் செய்யும் சிவபெருமான். அவருடைய தன்மைகளை வேதங்களும் விளக்கவல்லன வல்ல. ஆன்மாக்கள் அநாதியானவை, அளவில்லாதவை.

---

*இந்நாட்களிற் சமயோசிதமாக வரமபுகடத்தலே பெருவழ க்காகிச் சைவர்களது பேராற்றல் மழுங்கிச் சுவமதிப்புக் குன்றி அவர்கள் சிறுமனிதராயினர்.

†இத்தொடர்பிலே சைவசித்தாந்த உண்மைகள் சுருக்கமாக வுந் தெளிவாகவும் பன்னிரண்டு செய்யுளிற் சொல்லப்படுகின் றன.

அவைகள் அநுபவிக்க வேண்டிய வினைக்குத் தக்கதாக மனிதராகவும் விலங்குகளாகவும் வேறு பிறவிகளாகவும் தோன்றும். மனிதர் பெற்றுக்கொள்ளும் கல்வி, வீரம், செல்வம் முதலியன நிலைபற்றவை. தருமமொன்றே நிலையானது. தருமத்தால் அருளும், அருளினால் தவமும், தவத்தால் ஞானமு முண்டாம். ஞானங் கைகூடுமாயின் மூவகை மலங்களும் நீங்கும். அப்போது ஆன்மா பேரின்பத்தையடையும். ஆதலால், மக்களே, நீங்கள் தருமஞ் செய்து சிவபெருமானை நினைத்துத் தவம் புரியுங்கள்.

தருமமே போற்றிடி னன்பு சார்ந்திடு
மருளெ னுங் குழவியு மணையு மாங்கவை
வருவழித் தவமெனு மாட்சி யெய்துமேற்
றெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால்.

ஆதலின் மைந்தர்கா ளறத்தை யாற்றுதிர்
நீதினை விலக்குதிர் சிவனை யுன்னியே
மாதவம் புரிகுதிர் மற்ற தன்றியே
யேதுள தொருசெய லியற்றத் தக்கதே.

(காசிபனுபதேசப்படலம்-கூ-உச.)

தவத்தினாலே மார்க்கண்டேயர் யமனையும் வென்றனர்" என்று கூறி அச்சரித்திரத்தை விரித்துரைத்தனர். மார்க்கண்டேயருடைய தந்தையார் கௌசிகர். அவர் தவஞ்செய்த காலத்திலே ஓரிடத்திலே நெடுங்காலம் அசையாம லிருந்ததால் விலங்குகள் அவரைக் கல்லென நினைத்துத் தமது சரீரத்தின் தினவு நீக்குதற்காக அவரிலே உரிஞ்சிக் கொண்டுவந்தன. இதனாலே அவருக்கு மிருககண்டூயர் என்ற பெயராயிற்று. இத்துணை அரிய தவஞ்செய்தவர் துறவறத்தைப் பூணக்கருதியபோது

அவருடைய தந்தையார் அவரைத் தடுத்தார். மிருககண்டேயர் இல்லறத்தின் தீமைகளைப் பதினாறு பாடல்களில் எடுத்துக்காட்டினார்.*

முன்னருள பாச முயக்கறுக்க வேண்டியநான்
பின்னுமொரு பாசம் பிணிக்கப் படுவேனேற்
றன்னிகரி லீசன் றனையெவ்வா றெய்துவன்யா
னின்னலெனு மாழி யிடைப்பட் டுலேவேனே.

மெய்யான தில்லா முடவனொருவன் றனது
கையா னவையிரண்டுங் கந்தாத் தவழ்தருவா
னையா வதற்கு மரும்பிணியொன் றெய்தியக்கா
லுய்யானே யானு முவன்போற் றளர்வேனே.

(மார்க்கண்டேயப்படலம்-கஎ-கஅ.)

இல்லறத்தோன் குற்றஞ்செய்யில் அதற்குத் தீர்வுண்டு. இல்லறத்தில் அநுபவிக்கத்தக்க இன்பங்களை வேண்டாது அருந்தூயோரெனத் தம்மைக்கருதித் துறவறம் பூண்டோர் நிலேதவறுவராயின் அது மலேயினுச்சியினின்று விழுவதுபோலாகும். ஆதலால் இல்லறம் நடத்தி முடிந்தபின்னரே† துறவு பூணுதல் முறையெனக்காட்டி அவ்வாறே செய்யவேண்டுமென்று கட்டளையுஞ் செய்தனர்.

---

*இவர் கூறிய வேறோர் பாட்டிலே பெண்கள் பாவமே வடிவமாகவுடையவர் என்று சொல்லப்பட்டது. இது பெண்களையிச்சியாமைக்காகச் சொல்லியதன்றி அவர்கள் உள்ளபடி இழிவானவர்கள் என்று கருதியன்று. கற்புடைமாதர்களுக்கு ஒப்பாரும் மிக்காருமிலரென்றும் மழையும் அவர்கள் சொற்கடங்குமென்றும் சொல்லியதால் இஃதுணரப்படும்.

†எத்துணைச் சீரியகருமமும் பக்குவம் வரமுன்னர்ச் செய்யத்தக்கதன்றென்பதே இங்கு தெருட்டப்பட்டது.

சுழிதரு பிறவி யென்னுஞ் சூழ்திரைப் பட்டுச் சோர்வுற்
றழிதரு துயர நேமி யகன்றிடல் வேண்டு மேனுங்
கழிதரு நாளா னல்லாற் கதுமெனத் துறக்க லாமோ
வழிமுறை நும்மு னோரின் மற்றது புரிதி மன்னே.

(மார்க்கண்டேயப்படம்·சக.)

தந்தை சொன்மிக்க மந்திரமில்லை யென்பதையும் தந்தை தாயர் கடலில் விழச்சொல்லினும் விழுதலே முறையென்பதையும் நோக்கி மிருககண்டூயர் தந்தையாரது கால்களில் விழுந்து வணங்கி அவர் கட்டளையிட்டவாறு விவாகஞ்செய்து இல்லறம் நடாத்துதற் கிசைந்தனர். அவர் அவ்வாறே மணம்புரிந்து புத்திரப்பேற்றுக்காகத் தவஞ்செய்து பதினாறு வயதுவரையும் இருக்கத்தக்க ஒருமகவைப் பெற்றனர். அது மார்க்கண்டனென்று பேரிடப்பட்டது. இக்குழந்தை வளர்ந்து சகல கலைகளையுங் கற்றுப் பதினாறும் வயதிற் சிவபூசைசெய்யத் தொடங்கியது. சிவபூசையின் பயனாகச் சிவபிரான் அவருக்குத் தோன்றித் திருவடிதீட்சை செய்து பசுகரணங்களைச் சிவகரணங்க ளாக்கியருளினர். இதனாலே முறைப்படி பதினாறும் ஆண்டு அவருடைய புலாலுடம்பு நீங்கியதெனினுமாம். திருவடிதீட்சையால் பசுகரணங்கள் நீங்குதலை

"சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழி றேங்கடம்பின், மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மன மாமயிலோன், வேல்பட் டழிந்தன வேலையுஞ் சூரனும் வெற்புமவன், கால்பட் டழிந்தநிங் கென்றலை மேலயன் கையெழுத்தே."

என்னுங் கந்தரலங்காரத்திற் காண்க.

ஆன்மாக்களைச் சுவர்க்க நரகங்களிற் செலுத்துஞ் சத்தியின் அதிட்டேயத்தை இயமனென்பர். சிவபுண்ணி

யம் செய்வோராகிய சைவர்கள் சுவர்க்கநரகங்களுக்குச் செல்லாராதலால் அவர்கள் இவ்வியமனுக்குட்படார். இயமன் மார்க்கண்டரை வருத்தக் கருதியபோது இயமனுடைய தலையிற் சிவபிரான் திருவடியை* வைத்து நல்லறிவு புகட்டியருளினர். மார்க்கண்டேயர் பின்னுஞ் சிவபூசை செய்து முத்தியடைந்தனர்.

இவ்வாறு காசிபமுனிவர் கூறியதைக்கேட்ட மாயை "நீர் கூறியவை யாவும் வாய்மைகளேயாயினும் அவைகள் என்மக்களுக்குத் தகுந்தவையல்ல. அவர்களுக்குச் செல்வம், வீரம், கீர்த்தி, நீடியவாழ்வு முதலியவைகளே வேண்டியவை" என்றாள். அதற்குக் காசிபர் "அவற்றைப் பெறுதற்கு வேண்டிய வழிகளை நீயே சொல்லுவாயாக" என்று கூறினர். மாயை அவர்களை நோக்கி, "பிறவியெடுத்தோருக்குக் கல்வி செல்வம் ஆகிய இரண்டுமே வேண்டிய மேலான பொருள்கள். இவ்விரண்டனுட் செல்வமே மேலானது,"† என்று பல நியாயங்கள் காட்டி, அதைப் பெறும்பொருட்டு யாகஞ் செய்யுமாறு அவர்களை யனுப்பிவிட்டுக் காசிபனைப் பிரிந்து போயினாள். அப்பிரிவாற்றாமற் காசிபன் அவளிலுள்ள வேட்கையினால் வருந்திப் புலம்பினன். அதை அவன் தந்தையாகிய பிரமாவறிந்து அவனிடஞ் சென்று அவனுக்குக் காமத்தின்

---

*"மேலு மறிந்திலன் நான்முகன் மேற்சென்று கீழிடந்தும்
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்தசிந்தைக்
கால னறிந்தா னறிதற் கரியான் கழலடியே"

(திருநாவுக்கரசர்.)

†ஒருபக்க நியாயங்காட்டுதலில் இப்புராணகாரரது பேராற்றல் வியக்கப்படத்தக்கது. இவர் துரும்பு மலையினும் பெரிதெனக் காட்டும் வன்மையுடையார். இதனை இவ்விடத்தும் விந்தம் மேருவினும் சிறந்ததென்னுமிடத்துங் காண்க.

கேட்டை விளக்கி அவனுடைய மனத்தைத் திருத்தினார். கள் காமம் ஆகிய இரண்டனுள் கள் அறிவை யழிக்கும், காமம் உயிரையழிக்கும். காமம் நினைத்தாலுஞ் சுடும், கேட்டாலுஞ்சுடும், விலக்கினாலுஞ் சுடும். காமமாகிய நோயை விவேகத்தால் மாற்றியவரே முத்தியடைவர்.

வேதமுங் கலைகளு முணர்ந்து மேலதா
மூதறி வெய்திய முனிவ நீயொரு
மாதுதன் பொருட்டினான் மைய லெய்தியே
பேதுறு கிற்றியோ பேதை மாந்தர்போல்.

கண்டதோர் நறவமே காம மேயென
வெண்டரு தீப்பொரு ளிருமைத் தென்பரா
லுண்டுழி யழிக்குமொன் றுணர்வை யுள்ளமேற்
கொண்டுழி யுயிரையுங் கொல்லு மொன்றரோ.

உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே.

(மாயைநீங்குபடலம்-௬—௧௧.)

சூரன் முதலியோர் தமது குருவாகிய சுக்கிராசாரியரிடம் சிவமந்திர உபதேசம்பெற்று யாகஞ்செய்யத் தொடங்கினர்.

யாகத்திலே சூரபன்மன் பூதங்கள் காளிகள் வயிரவர்கள்* பேய்கள் முதலியவற்றுக்கு ஊன்பலிகளை முதலில் உதவினன். பின்னர் அநேக யாககுண்டங்களைச் செய்து பக்கத்திலுள்ள குண்டங்களிலே யாகஞ்செய்யு

*சிவதொண்டர்களாகிய பூதங்களும் உமைதொண்டராகிய காளிகளும் சிவவடிவமாகிய வயிரவக்கடவுளும் இவர்களின் வேறானவர்களாம்.

மாறு தன் தம்பியரை அனுப்பிவிட்டு அவன் நடுக்குண்டத்திலே சிவபிரானை நினைத்து யாகஞ்செய்தான். பதினாயிரமாண்டு யாகஞ் செய்துஞ் சிவபிரானெழுந்தருளி வந்திலர். அவர் வராததைப் பற்றிக் கவலைப்பட்டுப், பிறவுயிர்களைக் கொன்று கொடுக்கும் ஊனை யருட்கடலாகிய சிவபெருமான் ஏற்கமாட்டாரென்பதை யுணர்ந்து ஆகாயத்திற் சென்று தன்னுடைய தசையை வாளினால் வெட்டி அவியாகச் சொரிந்தான்.

**கண்ணு தற்பர னருள்செயாத் தன்மையைக் கருத்தி, லெண்ணி யிச்செயற் குறுவனே சிவனென விசையாப், பண்ணு மத்தொழில் பின்னவர் தங்கள் பாற் பணித்து, விண்ண கத்தின்மீச் சென்றனன் கடவுளர் வெருவ.** (அசுரர்யாகப்படலம் அரு.)

வெட்டப்பட்ட தசையானது உடலிலே வளர்ந்து வளர்ந்து வந்ததை அவன் கண்டு சிவபிரான் திருவருள் சுரந்தனரென நினைத்து மகிழ்ச்சியுற்றான். இவ்வாறு ஆயிரமாண்டு யாகஞ்செய்துஞ் சிவபிரானெழுந்தருளினாரல்லர். இனி யிறப்பதே தக்கதெனச் சூரன் நினைத்து வச்சிரகம்பத்திலேறி அதிலிருந்து குதித்துப் பொடியானான். சிங்கன் இதைக்கண்டு பதைத்துச் சோர்ந்துபுலம்பித் தன்னுடைய ஆயிரந்தலைகளையும் வெட்டி நெருப்பிலிட்டான். தாரகனுந் தனது தலையைவெட்டி யக்கினியிலெறிந்தான். ஆயினும் அவைகள் முன்போல உண்டாயின. இறுதியிலே சிங்கன் நெருப்பிலே விழுந்திறக்கும்படி ஆகாயமார்க்கமாகப் போகக்கருதலும் ஞானப்பொடியாகிய திருவெண்ணீறணிந்த மேனியையுடைய சிவபிரான் சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட பிராமணவேடத்தோடு அவ்விடம் எழுந்தருளினார்.

கண்ட கறைமிடற்றுக் கண்ணுதலோன் சுந்தரனை
விண்டு முதலோர் வியப்பவே வெண்ணெயிலாட
கொண்ட தொருபனவக் கோலந் தனைத்தரித்துத்
தண்டு மொருகை தனிலூன்றி வந்தனனே.

(வரம்பெறும் படலம்-க.)

இது ஒரு சிறப்பான பாட்டு. சிவபிரான் பிராமண வடிவ மெடுத்ததைக் கூறநினைந்தபோது ஆசிரியருக்குச் சுந்தரமூர்த்திநாயனாரது நினைவு வந்தமை பாராட்டப் படத்தக்கது. சூரபன்மனது நிலைக்குஞ் சுந்தரருடைய நிலைக்கும் எவ்வகைத் தொடர்பேனும் இல்லை. ஓர் தொடர்புமின்றிச் சுந்தரருடைய நினைவுவந்தமை சுந்தரரும் மற்றைய சிவனடியார்களுங் கச்சியப்பசிவாசாரியரது மனதிலென்றும்நிறைந்து நின்றமையைக் காட்டும். அருமையான ஒரு பிள்ளையை இழந்த தாயானவள் யார் எக்கதையைப் பேசினும் சிறிதுந் தொடர்பில்லாவிடத்துந் தன்பிள்ளையைப்பற்றிய கதையை எடுத்துக் கூறுவள். ஏனெனில், அப்பிள்ளையினதெண்ணமே அவளுடைய மனதில் நிறைந்து நிற்கின்றது. அதுபோலக் கச்சியப்பசிவாசாரியரது மனதிற் சிவபெருமானுஞ் சிவனடியார்களும் நிறைந்து நிற்றலால் தொடர்பின்றியும் அவர்களதுபெயரை யிழுக்குமாசை அவரை மேற்கொண்டு வருகின்றது. இவ்வாறு இவ்வாசிரியர் தமது புராணத்தைப் பெரியபுராணமுமாக்குகின்றனர். எவ்வாறெனில், இந்நூற்குப் பொருள்சொல்வோர் இதில் வரும் பெரியபுராணக்கதைகளை விரித்துச் சொல்லவேண்டியவராகலால் அவைகளும் இப்புராணக்கல்வியில் இடம்பெறுகின்றன.

சிவபிரான் சூரனை யெழுப்பி உமாதேவி சமேதராக இடபமீது தோன்றி ஆயிரத்தெட்டண்டங்களை நூற்

றெட்டு யுகம் ஆளும் அரசும் பாசுபதாத்திரம் முத லிய படைகளும் அவனுக்குக் கொடுத்தருளி அவனது தம்பியருக்கும் வரங்களைக் கொடுத்துத் தமது சத்தியன் றி ஒருவரும் அவர்களை வெல்வாரல்லர் என்றுசொல்லி மறைந்தருளினர்.

சூரனுந் தம்பியரும் வேள்விக்களத்தினின்றும் நீங் கித் தமது தந்தையாரிடம் போய் அவரைவணங்கித் தாம் செய்யவேண்டியதைக் கட்டளையிடும்படி வேண்டி னர்*. அப்போது காசிபர் "உங்கள் குலகுருவாகிய சுக்கிராசாரியரிடம் நீங்கள் போகில் இந்தச் செல்வம் மு தலானவைகள் வளர்ந்தோங்கத்தக்க வழியை அவர் உங்களுக்குக் கூறுவர்" என்று சொல்லி விடைகொடுத் தனுப்பினர். அவர்கள் சுக்கிரனிடஞ் சென்று அவரு டைய கால்களிலே விழுந்து வணங்கினர். அவன் அவர் களை ஆசீர்வதித்து வந்தநோக்கத்தை வினவினன். சூர ன் தான் நடந்து கொள்ளவேண்டிய நீதிமுறைகளைக் கேட்டான். சுக்கிரன் மாயாவாதத்தை உபதேசித்து மாயாவாத நீதிகளைக் கூறினன். நீதிகள் யாவும் மதங்க ளினின்றே பெறுதற்பாலன என்பதை அறிக.

இப்புராணகாரர் தவறானவற்றைக் கண்டிக்குங்கால் நீதிநூலாசிரியர்போல் அவற்றை நேரே விலக்காது அ வற்றின் தீமைகளை விளக்கி மனதிலுறுத்தி அத்தவறு களினின்றும் சுவேச்சையாக விலகச்செய்வர். இம்மு றையே சுவையும் வன்மையும் உறுதியுமுடையது இம்மு றையாற் கற்போர் உண்மைகளைத் தாமாகக் காண்பவரா

*இத்துணைச் செல்வமுஞ் சீரும் அதிகாரமும் பெற்றுச் செருக்கு மிக்க அந்த நிலையில் தந்தையை வழிபடலும் தந்தை சொற்படியே நடக்கும் கருத்தும் அவனுக்கிருந்தமை புத்திரர்க ளாயிருப்பவர் யாவரும் உற்று நோக்கத் தக்கது.

வர். ஒருவர் தாமாகக்கண்ட உண்மைகளைப் பிறர் கூறு வனவற்றினும் மேலாகக் கொண்டு அவற்றை அநுசரிக்க மிக்க ஆர்வத்தோடு முயலுதலியல்பு. ஆதலால் ஆசிரியர் அறிவூட்டும் முறையினுற் கற்போர்க்கு நல்லறிவே அன்றி நல்லொழுக்கமுங் கைகூடும். எந்நூற்கும் எவ்வாசிரியர்க்கும் இதுவே முதல்நோக்க மாதல்வேண்டும். மாயாவாதத்தைக் கண்டிக்கப்புகுந்த ஆசிரியர் மாயாவாதத் தின்படி நீதி அநீதியென்ற வேற்றுமையில்லை யென்றும் கொலை களவு முதலியவை தர்மங்களென்றுங் காட்டி, அம்மதத்தை யெவரும் கொடிது கொடிதெனக் கொண்டு தவிர்க்கத் தக்கதாகச் செய்தனர். பிராகிருதருக்குப்* போதிக்கும்முறை யிதுவே. ஞானநூலாசிரியர்கள் வைநயிகருக்[†]குபதேசிப்பவராதலின் புறச்சமயங்களைத் தவறென நேரேகாட்டுவர். பிராகிருதர் தவறுனவற்றையுஞ்சாருத வியல்பாதலால், விலக்கவேண்டிய வொன்றைத் தவறெனக் காட்டுதல் தனியே பயன்படாது. அது கொடிதெனவும் காட்டுதல்வேண்டும். தவறுசெய்வோரும் கொடியவைகளாகிய விஷப்பாம்பு சிங்கம் புலி முதலியவைகளினின்றும் விலகிக்கொள்வர். ஆதலால் மாயாவாதம் கொடியதோர் மதமென ஆசிரியர் காட்டினர்.

தீமைநிறைந்த மனத்தையுடையவனுகிய [‡]சுக்கிரன் சூரபன்மனுக்குச் சொல்லுகின்றுன், "பாசம் ஆன்மா

---

*பிராகிருதராவார் சரீரம் முதலியவற்றை ஆன்மாவெனக் கொண்டு மெய்வழியை நாடாதார்.

†வைநயிகராவார் விநயசீலமும் நித்தியாநித்திய விவேக முடையவராய் உண்மைவழியிலொழுக விரும்புவோர்.

‡"தீதுசால்மனத் தேசிகன் கூறினுன்" என்பது ஆசிரியர் வாக்கு. அவனுடைய சொல்லை மெய்யென்று நம்பாமைக்காகத் தொடக்கத்திற்றுனே "தீதுசால்மன" என்னும் அடை கொடுக்கப்பட்டது.

கடவுள் என மூன்றுபொருள்களுண்டென்று அறியாதார் சொல்லுவர். பாசமெனப்படுவது இல்பொருள், ஆன்மாவுங் கடவுளும் ஒன்றேயாம்.†

சிவன் திருவிளையாட்டிலே விருப்பங்கொண்டு தம்முடைய மாயையினாலே பூதங்கள்முதலிய தத்துவங்களை ஆக்குவர். இவைகளிலிருந்து உடம்புகள் தோன்றும். குடங்களிலே ஆகாயம் நிறைந்திருப்பதுபோல உடம்புகளிலே சிவன் நிறைந்து உயிராகி நிற்பர். குடங்கள் உடைய அவற்றுள்ளிருந்த ஆகாயம் வெளியேயுள்ள ஆகாயத்தோடு ஒன்றுவதுபோல, உடம்புகள் அழிய உயிரெனும் பொருள் இன்றிச் சிவனாகிய ஒருபொருளே எஞ்சி நிற்கும்.

மாயை இல்பொருளாயின் அதிலிருந்து தோற்றிய உடம்பும் உடம்பிலுள்ள பொறியும் இல்பொருளேயாம். ஆதலால் அப்பொறிகளால் அறியப்படும் பொருள்களும் மனம் வாக்குக் காயங்களும் அவற்றாற் செய்யப்படும் வினைகளும் இல்பொருள்களாம். வினைகள் இல்பொருளாயின் அவற்றால் வருவனவாகிய இன்பதுன்பங்களும் இல்பொருள்களே. அன்றியும் இல்பொருளாகிய மாயையை மெய்யெனக்கொள்ளினும், நித்த நிர்மல சிவமாகிய உயிரை இன்பதுன்பங்கள் தாக்கவல்லவைகளோ? அவைகள் உடலையே சாரும். பிறத்தலும் இறத்தலும் வினைசெய்தலும் உடற்குரியனவன்றி அவற்றிற்செறிந்த

---

† ஆன்மாவுங் கடவுளும் ஒரேபொருளெனலாற் கடவுளென்று வேறொருபொருளிலதாயிற்று. ஆதலால் மாயாவாதம் நிரீச்சுரவாதங்களுளொன்றென அறிக. இதனாலேபோலும் மாணிக்கவாசகசுவாமிகள், "மாயாவாதமென்னும், சண்டமாருதம் சுழித்தடித்தாஅர்த் துலோகாயதனெனு மொண்டிறற்பாம்பின், கலாபேதத்த கடுவிடமெய்தி" என்று மாயாவாதத்தை உலோகாயதத்தோடு சேர்த்தெண்ணி யிரண்டையுங் கண்டித்தருளினர்.

சிவத்திற் குரியனவல்ல. ஆதலால் தருமமே நல்லதென்று அதனைச் செய்வதும் பாவந் தீயதெனச் செய்யாதுவிடுதலும் அறிவின்மையாம். தருமஞ்செய்க, அதர்மஞ்செய்யற்க எனக்கூறுவர் மூடர்கள்.

தஞ்ச மாகுந் தருமதன் ருலெனா
நெஞ்ச கத்து நினைந்து புரிவதும்
விஞ்சு கின்ற வியன்பவந் தீதென
வஞ்சு கின்றது மாமறி வின்மையே.

தருமஞ் செய்க தவறுள பாவமாங்
கருமஞ் செய்யற்க வென்பர் கருத்திலா
ரிருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல்
வருவ தொன்றில மாயம்வித் தாகுமோ.

(சுக்கிரனுபதேசம்-நஅ, சO.)

உண்மை இதுவாதலால் நீயேபிரமமென நினைந்து கொண்டு தேவர்களைச் சிறைசெய்து அவர்களுடைய பதவிகளை அசுரருக்குக் கொடுப்பாயாக. கொலை களவு காமம் முதலிய பாதகங்களையும் கொடியவஞ்சனைகளையும் நற்காரியங்களென்று நினைத்துச் செய்க. சிவபிரான் தந்தருளிய ஆயிரத்தெட்டண்டங்களையும் இம்முறைப்படியாண்டு சுகமாக வாழ்வாயாக.”

சூரன் அவருடைய சொல்லைத் தலைமேற்கொண்டு தன்னுடைய ஆளுகைக்குட்பட்ட அண்டங்களின் நிலைமை யாவற்றையும் உரைக்குமாறு வேண்டினன். சுக்கிராசாரியர் அவைகளை விளக்கக்கேட்டு அவன் அவருடைய அடிகளை வணங்கி அவ்விடம்விட்டுப் புறப்பட்டான். பின்னர் தாயாகிய மாயை பெருமகிழ்ச்சியோடு மக்கள்பாற் சென்றாள். அவர்கள் அவளை வணங்க, அவள் அவர்களை ஆசிர்வதித்து, “நீவிர் தேவர்களை வெல்லுதல்வேண்டும். வெல்லுதற்கு மாயச்செயல்கள் வேண்டுமாயின் என்னை

நினைக்கில் நான் நீவிர் விரும்பியயாவுஞ் செய்வேன்" என்று சொல்லிப் போயினன்.

சூரன் பத்துத்திக்கிலுமுள்ள தேவர்களையும் பிறரையும் வென்று திரும்பி வந்து தேவதச்சனைக்கொண்டு வீரமாமகேந்திரமென்னும் நகரைச் செய்வித்து அங்கே வாழ்ந்துவந்தான். அக்காலத்தில் தனது குலப்பகைவராகிய தேவர்களைத் தண்டிக்கக் கருதி அவர்களை வென்று சிறைப்படுத்தி அவர்களைக்கொண்டு இழிவான வேலைகள் செய்வித்தான். ஒருநாள் அவன் இந்திராணியில் ஆசைகொண்டு அவளையும் இந்திரனையுங் கொண்டுவருமாறு சிலரை ஏவினான். அவ்விருவரும் இதையறிந்து பூலோகத்துக்குப்போய்ச் சீகாழியிலே மறைந்திருந்து சிவபூசை செய்துவந்தனர். சூரனுடைய ஏவலாளர் அவர்களை எவ்விடத்துங் காணாது திரும்பினர். தேவேந்திரன் பொன்னுலகைவிட்டுப்போனதால் அங்கே எஞ்சி நின்ற தேவர்கள் கலங்கினர். இந்திரகுமாரனாகிய சயந்தன் இதையறிந்து அவர்களைக் காத்தற்காக அங்குபோனான். அங்கே நாரதமுனிவர் சென்று அவனுடைய தாய் தந்தையர் மறைந்திருக்குமிடத்தைக் கூறி இன்பதுன்பங்கள் வினைப்பயனாக வருவனவன்றிப் பிறரால் வருவனவல்லவென்றும் அவற்றுக்காக மகிழ்தலும் வருந்தலும் ஆகாவென்றும் அவை நிலையற்றவை யென்றுங் கூறி அவனைத் தேற்றினர்.

தீங்குவந் தடையுமாறு நன்மைதான் சேருமாறுந்
தாங்கள்செய் வினையினாலே தத்தமக் காயவல்லா
லாங்கவை பிறரால்வாரா வமுதநஞ் சிரண்டினுக்கு
மோங்கிய சுவையின்பேத முதவினர் சிலருமுண்டோ.

இன்பம தடைந்தகாலை யினிதென மகிழ்ச்சியெய்தார், துன்பம துற்றபோதுந் துண்ணெனத் துளங்கிச்

சோரா, ரின்பமுந் துன்பந்தானு மிவ்வுடற் கியைந்த வென்றே, முன்புறு தொடர்பையோர்வார் முழுவது முணர்ந்தீரார். (இந்திரன்கரந்துறைபடலம் ருக–ருஉ.)

நாரதமுனிவர் பின்பு விந்தகிரியைநோக்கிப் போனார். அந்நாளில் விந்தமலையாய் நின்றது ஓர் அசுரனின் மாயவடிவம். அவன் அழியுங்காலம் நேர்ந்தமையால் நாரதமாமுனிவர் அவனோடு உரையாடத்தொடங்கி, மேருமலை அவனிற் பன்முறை சிறப்புடைத்தென்று காட்டினர். அவன் அவர் கூறிய ஏதுக்களையே எடுத்து அவைகள் மேருவுக்குச் சிறப்பாகாமல் இழிவாதலை நன்குகாட்டினன். பெருமைகளைச் சிறுமைகளாகவும் சிறுமைகளைப் பெருமைகளாகவுங் காட்டும் வன்மையில் இப்புராணகாரர் ஒப்புயர்வில்லாதவர். இத்திறனை இந்நூலிற் பற்பல இடங்களிற் காண்க. நாரதரும் விந்தகிரியும் பேசியது பின்வருமாறு:—

க. நாரதர்:—மேருமலை சிவபிரானது வில்லாகிய பெருமையையுடையது.

விந்தகிரி:—மலைகளின் ஓர் பெருஞ்சிறப்பு ஒன்றினும் வளைக்கப்படாமை. மேருமலை வில்லாக வளைந்தது. அதனாலே அது மலைகளின் சிறப்பைக் கெடுத்து அவைகளுக்கு வசையை யுண்டாக்கியது. வசையை நீர் பெருமையெனக்கூறுதல் தகுமா?

உ. நா:—உமாதேவியார் இமயமலையிலே அரசன் மகளாகப் பிறந்தனர். இமயம் மேருவின் பக்கத்தில் உள்ளதினாலே உமாதேவியார் பிறந்த பெருமை மேருவுக்குண்டு.

வி:—எக்காலமும் எவ்வுயிரையும் படைப்பவராகிய உமாதேவியார் பிறப்பதெவ்வாறு? அரசனுடைய தவப்பயனாக அங்கே அவர் வதிந்ததே உண்மை.

௩. நா:—சங்காரகாலம் வரையும் உலகங்களைத் தாங்குவது மேருமலையே.

வி:—இவற்றைத் தாங்குவது சிவசத்தியன்றி மேருமலையன்று.

௪. நா:—மேரு ஆயிரம் முடிகளை யுடையது.

வி:—பலதலைகளையுடைமை பெருமையாயின் மரங்களுட் பலதலைகளையுடையதாகிய கள்ளியே சிறந்ததாகவேண்டும்.

௫. நா:—சூரியன் முதலிய கிரகங்கள் யாவும் மேருவை வலம்வருகின்றன.

வி:—இக்கோள்களெல்லாம் ஒவ்வொருநாளும் என்னையுஞ் சுற்றுகின்றன. இப்பூமியிலுள்ள ஒவ்வொரு கல்லையும் வலம்வருகின்றன.

௬. நா:—சூரன் மேருமலை ஒன்றையே தப்பவைத்தனன்.

வி:—சூரன் இதைக் கல்லென நினைத்துப் பொருட்படுத்தாது விட்டனன். விட்டுணுவை வென்றவனுக்கு மேரு ஒரு பொருளா?

௭. நா:—சிவபிரான் எழுந்தருளி வீற்றிருக்குங் கயிலைமலை மேருவின் பக்கத்திலுள்ளது.

வி:—கயிலாயகிரிக்குப் பக்கத்திலுள்ள மலைகள் வேறும் பலவுள.

௮. நா:—தேவர்கள் வாழுதற் கிடமாக உள்ளது மேருமலை.

வி:—தேவர்கள் வாழுதற் கொருமலை வேண்டியதே. அது எதுவாகிலும் ஆகலாம்.

௯. நா:—அது பொன்முடிகளை யுடையது.

வி:—மண்ணாற் செய்யப்பட்டவைகள் பூச்சினால் விளங்குவது போலஅதன் முடிகள் பூச்சினாற் றயங்குவன. அதிலுள்ள சிறப்பென்னையோ?

க0. நா:—மேரு மிகமேலாகப் பரந்துயர்ந்து நிற்கும் பெருமையினை யென்றுமுடையது.

வி:—அதன் மூன்று முடிகளைக் காற்றடித்துடைத்தது நீர் கேள்விப்படவில்லையா? வீரபத்திரக்கடவுள் சரபவடிவமெடுத்தபோது சிறகடிப்பினுண்டாகிய காற்றிலே மேருமலை மின்மினிபோலப் பறந்து கலங்கியதை உணர்ந்திலீரோ? மேரு பாரதம் எழுதுதற்குரிய ஏடாகச் சிறத்திலதோ? இது ஒரு மலைதானே, இது விட்டுணு அன்று. பிரமா அன்று. இந்திரன் அன்று. இத்துணை ஏமாப்பேனோ?

இவ்வாறு சொல்லி விந்தமலை ஆகாயம் வரையுமளாவிப் பெருத்துநின்றது. அப்போது "முதுரைத்தமிழ் முற்றுணர் மாமுனி"யாகிய அகத்தியமுனிவர்† அவ்வழிச் செல்வாராயினர். அவர் அதன் செருக்கை அடக்கும் வன்மையை வேண்டிச் சிவபிரானை வணங்கித் திருவருள் பெற்று அம்மலையை நிலத்துக்குக்கீழே போக்கியருளிப் பொதியமலையை நோக்கிச் சென்றார். போகும்வழியிலே* கொடிய வைத்ணவர்கள் வாழுகின்ற குற்றாலத்

† அகத்தியர் தமிழை நன்கு கற்றவரென்றதினால் அவருடையகாலத்துக்கு முன் தமிழ்மொழி பன்னூல்கள் நிறைந்து தேங்கியிருந்ததென்பது பெறப்படும்.

*இவ்வழியிலே சூரனுடைய மருகனாகிய வில்வலன் தனது தம்பியை ஆட்டின் வடிவெடுக்கச் செய்து அவனைக் கொன்று அகத்தியருக்குச் சமைத்துக்கொடுத்தனனெனக் கூறப்பட்டது. அகத்தியர் புலாலுண்டதெவ்வாறு என்று கேட்கின்: அவர் இருவினையொப்புடையவராதலின் வேற்றுமை காட்டாது எதுகொடுக்கப்படினுஞ் சாப்பிடுவரென அறிக. அவர் விரும்பி உண்ணினே அது பாவமாகும்.

தை அடைந்து அக்கோயிலுக்குட் சென்றார். அங்குள்ள வைஷ்ணவர்கள் அவரைத் தடுத்தமையால் அவர் திரும்பிச்சென்று வைஷ்ணவப்பிராமண வடிவத்தோடு பின்பு வந்து அவர்களிடம் பூசைத்திரவியங்களைப் பெற்று உட்சென்று விட்டுணுவின் திருவுருவத்தைச் சிவலிங்கமாக்கிப் பூசைசெய்து பொதியமலையை யடைந்தனர்.

இந்திரன் சீகாழியிலிருந்ததை அறிந்த தேவர்கள் சிலர் அங்குசென்று அவன் தம்மை அந்தரிக்கவிட்டது முறையன்றெனக் குறைகூறினர். அதற்கு அவன் இந்திராணியின் கற்பைக் காத்தற்கும் தேவர்களது துன்பத்தைத் தீர்த்தற்கும் சிவபூசைபண்ணும் நோக்கமாகத் தேவலோகத்தைவிட்டு அவ்விடம் சென்றதாகச் சமாதானங் கூறினான். பின்பு அவன் இந்திராணியை ஐயனருடைய† காவலில் ஒப்பித்து விட்டு அசுரரது கொடுமையைப்பற்றிச் சிவபெருமானுக்கு முறையிடுதற்குத் தேவர்களோடு திருக்கைலாசத்துக்குப் போனான். ஐயனார் இந்திராணியைக் காத்தற்குத் தமது படைத்தலைவராகிய வீரமாகாளரை நிறுத்திவிட்டுத் தம்மிடத்துக்குப் போயினர்.

---

†மோகினிவடிவங்கொண்ட விட்டுணுவைச் சிவபிரான் சேர்ந்து பெற்ற பிள்ளை ஐயனார் என்ப. சிவபிரானது திருவருள் விட்டுணுவாகிய மூர்த்தியில் நின்று அதிட்டித்தலாற் காத்தலாகிய தொழில் நடைபெறும். அவ்வருட்டொழிலாகிய காத்தலை ஐயனாரெனக் கூறல் புராணமுறைக்குத் தக்கதாம். இப்படலத்தில (மகாசாத்தப்படலம்) உஅ ம் செய்யுளில் விட்டுணுவை ஒரு சத்தி என்றலும், ௩உ-ம் செய்யுளிற் சிவபிரானுக்கு விருப்புவெறுப்பில்லையாதலால் "உற்ற காதலும் உண்மையதன்று," என்றலும் புணர்ச்சியென்னுஞ் சொல் மேற்கூறிய பொருளையேயுடையதென்பதைத் தெளிவாக்கும். மேல் ௬௯-ம் பாட்டில் ஐயனார் "எவ்வுலகையும், கங்குலும் பகலெல்லையுங் காப்பன்," என்றதனால் அவர் காத்தலருளின் வடிவென்பது பெறப்படும்.

அதன்பின் சூரனது தங்கையாகிய அசமுகியும் அவள் தோழியாகிய துன்முகியும் சீகாழிக்கு வந்து இந்திராணியைக் கண்டனர்.

நூலாசிரியர் அசமுகியிலுள்ள பதினெட்டுத் தீயகுணங்கள் கூறுகின்றனர். அத்துணைத் தீயவளாயினும் இந்திராணியை வலிந்திழாமல் தனது தமையனாரிடம் வருமாறு மிக்க ஆதரவோடு வேண்டினள். கொடுந் தீயோரும் தமது தீச்செயலிலும் நீதிமுறையை யாளக் கருதல் யாவராலும் சிந்திக்கற்பாலது. இந்திராணி அவளுடைய மூச்சுக்கு முன்னும் நிற்குமாற்றலில்லாதவளாயினும் அச்சமின்றி நீதிமொழிகளைக்கூறி அந்த எண்ணத்தை மறந்துவிடுமாறு அவளுக்குரைத்தனள். அவளது கற்புநெறியால் வந்த இத்திண்மையும் பாராட்டத் தக்கது.

அவள் தன்சொற்கிசையாததைக்கண்டு அவளை அசமுகி வலிந்திழுந்துச் சென்றாள். இந்திராணி ஐயனாரைக் கூவிக் கதறினாள். வீரமாகாளர் சென்று அவளைத் தண்டியாது இந்திராணியை விடும்படி கட்டளை செய்தனர். அவள் ஓர் மலையைப் பிடுங்கி அவர்மேலெறிந்து அவருடைய வாளையுமொடித்து, "உன் உயிரோடு தப்பிச் செல்வாயாக" என்று சொல்லி இந்திராணியை யிழுத்துப் போயினள். அப்போது மாகாளர் அவளது கூந்தலையும் கையையும் அரிந்து இந்திராணியை மீட்டார். அசமுகி துக்கப்பட்டு வருந்தினாள். அவளை நோக்கித் துன்முகி "நீ கவலைப்படாதே, துன்ப அநுபவம் உயிர்கள் யாவற்றுக்கு முண்டு. இன்பத்தை மாத்திரம் அநுபவித்தற்காக யாம் இப்பிறவி யெடுத்தேமல்லேம். சிவபெருமானும் சிவஞானிகளு மன்றி மற்றியாவர்

துயரின்றி வாழ்வார். நீ வருந்தாதே,"† என்று அவளைத் தேற்றினள்.

நினைவருங் கண்ணுத னிமலற் கேயலா
லனையனை யடைதரு மறிஞர்க் கேயலா
லெனைவகை யோர்க்குமெவ் வுயிர்க்கு மேற்பதோர்
வினைபடு மிழிதுயர் விட்டு நீங்குமோ.

(அசமுகிபுலம்புறுபடலம்-உரு.)

அவர்களிருவரும் சூரனுக்கு முறையிடுவதற்கு மகேந்திர நகருக்குச் சென்றனர். அப்போது சூரன் சிங்காசனத்திலரசிருந்தனன். அவனுடைய அரசிருக்கையைத் தக்கவாறு விளக்குதலெவர்க்குமரிது. பிரமவிட்டுணுக்கள் நடுங்கி ஒடுங்கி நிற்கத்தக்க இராசசபையை வர்ணிக்கும் வன்மை திருவருளுடையோர்க்கன்றி ஏனையோர்க்குச் சாலாது. இந்நூலாசிரியர் இவ்வருந்தொழிலைச் செவ்வனே செய்தனர். அவரது சொல்லும், கவியும், பொருளும் அச்சபைச் சிறப்பை நன்களந்தன. இஃதொரு பேராற்றலாம். அசமுகி சூரனுக்கு முன்னேநின் றழுதுபுலம்பச் சூரனுக்குக் கோபமுண்

---

†உலகத்திலே நாம் எத்துணை நீதியாக நடப்பினும் பிராரத்தத்தினால் துன்பம் வரும். பிறர் நமக்கு நீதியீனஞ் செய்தல் கூடும். அப்போது அவர்களை நோவது முறையன்று. உலகத்திலே யுண்டாகும் பிணக்குகளுட் பெரும்பாலன இவ்வுண்மையை உணராமையா லுண்டாவன. பிராரத்தக்கலப்பிருத்தலால், எமக்கு நீதியாகக் கிடைக்கவேண்டியதென்று எமக்குத்தோற்றுவது கிடையாமற்போவதும் முறைமையாகும். ஆதலால் அங்ஙனங் கிடையாக்கால், நாம் நோவதேனும் பிறரை நோவச்செய்வதேனும் தகாதனவாம். பிறர்செய்யும் நீதியீனங்கள் எமது பழைய வினையின் பயனென்று கருதத்தகும். அவற்றினின்று எம்மை நீக்குதற்குவேண்டிய முயற்சிகள் கூடுமாயின் செய்வதேயன்றி அவற்றுக்காகப் பிறரோடு பொருதல் தகாததாம்.

டாயது. அக்கோபத்தி னதிர்ச்சியால் திக்குப்பாலகர்களும் முனிவரும் கலங்கினர். மேரு குலைந்தது, பாரும் விண்ணும் நடுங்கின. பிரம விட்டுணுக்களுடைய உலகங்கள் அதிர்ந்தன. மற்றெவ்வுலகங்களிலுள்ளோரும் கலங்கினர். அதையறிந்த அவன் புதல்வனுகிய பானுகோபன் தந்தையைப் பணிந்து நின்று "மும்மூர்த்திகளுள் ஒருவரேயன்றி வேறெவரும் உன்னுடைய முனிவுக்குத் தகுதியுடையாரல்லர். உன் தம்பியரது கோபத்துக்கும் போதியவரன்று. ஆதலால் கோபத்தையொழிக. நான் அவ்விடம் போகின்கிறேன்" என்முன். பின்பு அவன் தேவலோகத்துக்குப் போய் யந்திரத்தேரிலிருந்து சயந்தனோடு போர்செய்து அவனையும் மற்றத்தேவர்களையும் சிறைப்படுத்திப் பொன்னகரை நெருப்புக் கிரையாக்கினன். இச்சந்தர்ப்பத்தில் ஆசிரியர் செல்வ நிலையாமையையும் வீட்டின் சாசுவதத்தையும் நன்கு விளக்குகின்றனர்.

ஊழியி னன்றி யென்று மொழிவுறாத் துறக்க மூதூர்
பூழிய தான தன்றே புரந்தரன் வறியன் போனுன்
வீழுறு சிறையி னுற்ருர் மிக்கவ ரென்ருல் யாரும்
வாழிய செல்வந் தன்னை நிலையென மதிக்க லாமோ.

காடு போந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டா
னூடில விண்பதச் செய்கையீ தெம்பிரா னல்கும்
வீட தேயலாற் றுன்பறு மாக்கம்வே றுண்டோ.

(அமரர்சிறை - கூகூ, க0எ.)

# மகேந்திர காண்டம்.

விரிஞ்சன்மா றேவராலும் வெலற்கரும் விறலோ னாகிப், பெருஞ்சுரர் பதமும்வேத வொழுக்கமும் பிறவு மாற்றி, யருஞ்சிறை யவர்க்குச்செய்த வவுணர்கோ னவிகொள்வான், பரஞ்சுட ருருவாய்வந்த குமரனைப் பணிதல்செய்வாம்.

முருகக்கடவுள் திருச்செந்தூரிலெழுந்தருளியிருக்கப் பிரம விட்டுணு முதலியோர் பூசைசெய்து தம தின்னலை நீக்குமாறு வேண்டினர். அப்போது முருகவேள் அவர்களை நோக்கி "அசுரரைத் தொலைத்தற்காக நாம் நாளைக்குப் போர்புரியச் செல்வோம். அதற்கு முன் சூரனுடைய கருத்தை வெளிப்படுத்தற்கு ஒரு தூதனை அனுப்பல்வேண்டும்" என்றருளிச்செய்தார்.* அங்ஙனமே முருகப்பிரான் வீரவாகுதேவரைத் தூதாக அனுப்பியருளினர். வீரவாகுதேவரது பெருமை மேல் வரும் படலங்களிற் பாராட்டப்படுகின்றது. ஆசிரியர் முருகப்பிரானிற் கொண்ட அடங்கா அன்பு அவரது தூதுவரிற் பரந்து செறிவதை அப்படலங்களிற் காண

---

* நாளைக்குப் போருக்குச் செல்வோமென்று குமாரக்கடவுள் கூறியதாற் சூரன் தேவர்களைச் சிறையினின்றும் விட இணங்கானென்பது முன் உணரப்பட்டதென்பதும், முறை பிரமாணமைக்காகவே தூதனை யனுப்பியதென்பதும் அறிக. இது வீரவாகு சயந்தனைத் தேற்று மிடத்திலுங் காண்க.

> சுறமறி யளக்கர் வைகுஞ் சூரபன் மாவின் மார்பி
> னெறிசுட ரெஃகம் வீசி யிருபிள வாக்கி னல்லாற்
> சிறையுளீர் மீள்கி லாமை தேற்றியும் பொருநர் செய்யு
> மறநெறி தூக்கி யொற்று வடியனை விடுத்தா னையன்.

(வீர - சயந்தனைத்தேற்று படலம் - உசு)

லாம். வீரவாகுதேவருடைய பெருமைமையைச் சொல்லுவதில் ஆசிரியரது மனமடங்காது இடையினிடையே முருகப்பெருமானுக்குந் துதிகளைப் பாடிக் களிக்கின்றது.

ஆவதோர் காலை யெந்தை யாறிரு தடந்தோள் வாழ்க, மூவிரு வதனம் வாழ்க முழுதருள் விழிகள் வாழ்க, தூவிடை நெடுவேல் வாழ்க தொல்படை பிறவும் வாழ்க, தேவர்க டேவன் சேயோன் திருவடி வாழ்க வென்றான். (வீர - கந்தமாதனஞ்செல்படலம் - ௪௬)

போத நாயகன் பரம்பொரு ணாயகன் பொருவில்
வேத நாயகன் சிவனரு ணாயகன் விண்ணோர்க்
காதி நாயக னறுமுக நாயக னமலச்
சோதி நாயக னன்றியார் சூரனைத் தொலைப்பார்.

(மகேந்திரஞ்செல்படலம் - ௧௬)

வீரவாகுதேவர் திருச்செந்தூரினின்று மகேந்திரபுரியை யடைந்து அதன் சிறப்பைப் பார்த்து "ஆயிரத்தெட்டண்டங்களினு முள்ள சிறப்பெல்லாம் ஒரேயிடத்திலிருக்க இங்கு கண்டேன். தருமத்தையு மிரக்கத்தையும் மாத்திரங் காண்கிலேன். சூரன் அவற்றையுந் தேவர்களோடு சிறையில் வைத்தனன்போலும்" என்றின்னும் பலவாறு புகழ்ந்து மிகழ்ந்துங் கூறினர். இந்நகர்ச் சிறப்பைச் சொல்லத்தக்கவர் வேறிலரெனக் கண்டு அச்சிறப்பை ஆசிரியர் வீரவாகுதேவரது திருவாக்காகத் தொண்ணூறு செய்யுட்களிலமைத்துப் பாடினர். அவைகளுட் பிற்பகுதியிலுள்ள ஒரு கவி:—

ஆயி ரம்பதி னாயிரங் கோடிநா வளவி
லாயி ரம்விழி யாயிர மாயிரஞ் செவிக

ளாயி ரம்புத்தி கொண்டுளோர்க் கல்லதிவ் வகன்சீ
ராயி ரம்யுகங் கண்டுதேர்ந் துரைப்பினு மடங்கா.
(நகர்புகுபடலம் - அஅ)

பின்பு வீரவாகுதேவர் நகரத்துக்குட் சென்று தேவர்களது சிறைக்களத்தை உற்றுநோக்கினர். சயந்தன் ஆற்றொணாத் துன்பினால் வாடி அழுது புலம்பினன். அவனுடைய புலம்பலாகிய இருபத்திரண்டு கவிகள் பெருஞ்சிறப்புடையன.

அன்பா னவருக் கருளுதியாற் பத்திநெறி
யென்பா லிலையா லிறையுமெவ னளித்தி
நன்பான் மதிமிலைச்சு நாயகனே நல்லருள்கூ [யே.
ருன்பான் மிகநொந்தே யோதியதென் பேதைமை

தண்டேன் றுளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கைவெஃகிக், கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே, கண்டேன் பிறர்தம் பதத்தொலைவுங் கண்டனனாற், றெண்டேன் சிவனேநின் றொல்பதமே வேண்டுவனே. (சயந்தன் புலம்புறுபடலம் எஉ, எசு)

**இவற்றின் பொருள்:**—இளம்பிறையை யணிந்த எம் பரமபிதாவே, தேவரீரில் மெய்யன்புடையார் உமது திருவருளை நுகர்ந்து நல்வாழ்வடைவர். நான் இறையளவேனும் அன்பில்லாதவன். ஆதலால் நான் துன்பத்தினின்றும் நீங்குவதெவ்வாறு? தேவரீரிலே குறைகூறியது என் அறியாமையே. எனக்கருள்கூருக. சிவபிரானே, குளிர்ந்த தேன் துளிக்கின்ற கற்பகதருவாழ்க்கையை நான் விரும்பியதாற் பெருந்துன்பத்தை யடைந்தேன். தேவலோகவாழ்க்கை பேரளவிற் சுகமுடையதன்றி வீண்வாழ்க்கையென்பதைக் கண்டுகொண்டேன். பிரமா விஷ்ணுமுதலாக உயர்ந்த பதவியிலிருந்தோரும் அவற்

றை யிழந்து வருந்துவதைக் கண்டேன். ஆதலால் என்றுமழியாத தேவரீரது பதவியையே இப்போது சாதிக்கின்றேன்.

வீரவாகுதேவர் அவன்பாற் சென்று, அவனும் ஏனைய தேவரும் வருந்துவதின் காரணத்தையும் அக்காரணமாகிய தீவினை அநுபவித்து முடியக் குமாரக்கடவுள் சிறைமீட்கும் வகையையுங் கூறி அவனைத் தேற்றினர். பின்பு அவர் சூரனுடைய சபைக்குப் போய் அங்கு புகுந்தனர். இதனைக் கூறும் அவைபுகுபடலம் அரிய உண்மைகள் நிறைந்துளது. நன்கு கற்கப்படத் தக்கது. கந்தபுராணச் சிரோரத்தினங்களுள் ஒன்று. சூரன்மைச்சியற்படலத்திலே உள்ள சிங்கனுடைய மொழிகளும் இதைப்போலச் சீரியனவாம். வீரவாகுதேவர் சூரனுடைய சபையைக் கண்டு வியந்தனர். அப்பெருமான் வியப்படையத்தக்க சபை எத்துணைச் சிறப்புடைத்தாதல்வேண்டும். அதன் நயத்தை அளக்கில், "அவர் வியந்தார்" என்னு மிருசொற்களே தக்கவையாம். வேறெம்மொழிகளும் அதன் சீரைக் கூறுமாற்றலுடையவையாகா. அவர் அதைக் கண்டு வியந்து "இவன் பெற்ற செல்வம் வேறெவரு மெக்காலமும் பெறுதலொன்று. இவற்றை அநுபவித்து இன்னும் பன்னெடுங்காலம் வாழக் கருதாது கெடுகின்றனே. இவன் தேவர்சிறையாகிய நெருப்புப்பொறியை மின்மினியென்று மயங்கித் தனது கூட்டுக்குள் வைத்து அழிய வழி தேடியது விதிவன்மையே" யென்று அவனிலிரக்கங் கொண்டனர்.

மெய்ச்சோதி தங்குசிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார், கச்சோத மென்று கருதிக்

குடம்பை தனினுய்ந்து மாண்ட கதைபோ, லச்சோ
வெளிப்ப லிமையோரை யீண்டு சிறைவைத்த பாவ
மதனு, லிச்சூர பன்மன் முடிவெய்து நாளை யிதனுக்
கொரைய மிலேயே. (அவைபுகுபடலம் - சங.)

இவ்வாறிரங்கி அவனுடைய சபைக்குட் சேரலும், சம்பந்தசுவாமிக்குச் சிவபிரான் முந்துப்பந்தரும் பல்லக்கு முதவியதுபோல வீரவாகுதேவ ரிருத்தற்கோர் தவிசாகக் குமரக்கடவுள் ஒரு சிங்காசனத்தை அச்சபையிடைச் சேர்த்தனர். *

நித்தி லப்படு பந்தருஞ் சிவிகையு நெறியே
முத்த மிழ்க்கொரு தலேவனு மதலேக்கு முதல்வ
னுய்த்த வாறெனக் குமரவேள் வீரனுக் குதவ
வத்த லேப்பட வந்தது மடங்கலேற் றணேயே.
(அவைபுகுபடலம் - ருஉ.)

அவர் குமாரக்கடவுளுடைய திருவடிகளைத் துதித்துக்கொண்டு சூரியமண்டலத்திலே சிவபிரான் விளங்குவதுபோல அவ்வொளிபொருந்திய ஆசனத்தின் மீது சிறப்புடனிருந்தார். சபையிலிருந்தோர் யாவரும் அதிசயித்தனர். அவ்வதிசயத்தை ஆசிரியர் இருபது பாட்டுகளிற் பாராட்டுகின்றனர். சூரன் கோபங்கொண்டு வீரவாகுதேவரைப்பார்த்து "நீ செய்த இம்மாயத்தை இந்நகரிலுள்ளோருட் கருப்பத்தில் வாழுங் குழவிகளுஞ் செய்ய வல்லவரென அறிவாயாக. நீ வந்த நோக்கத்தை அறிந்தபின்னரே நான் உன்னைத் தண்டித்தல் தகும்" என்று கூறினன். அதற்கு வீரவாகுதேவர் "வீரமில்லாதவரே மாயைசெய்பவர். என்னையும் அவர்போல நினைந்தாய்.

---

* இப்போது ஆசிரியருக்கு சம்பந்தசுவாமிகளுடைய எண்ணம் சிந்தையில் வந்தமை அவரது அடியார்பக்திச் சிறப்புக்கோர் சான்றும்.

புரந்த ரன்குறை யயன்முத லமரர்தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலா நீக்கிமற் றவர்தந்
திருந்து தொல்லிறை யுதவுவான் செந்திமா நகர்வந்
திருந்த வாதியம் பண்ணவ னடியனேன் யானே.

(அவைபுகுபடலம் - ௯௪.)

நீ தேவர்களைச் சிறையினின்றும் நீக்கி அறநெறியாக அரசு செய்தல்வேண்டும். நீ அவ்வாறு செய்யாயாயின் குமாரக்கடவுள் உன்னை அழித்தருளுவர். இதனை உனக்கறிவிக்கக் கருதி குமாரக்கடவுள் என்னை உன்பாலனுப்பினர். அளவில்லாத வருடங்களாகக் கடுந்தவமியற்றி எமது பரமபிதாவாகிய சிவபிரான்பாற் பெற்ற பேராயுளையுஞ் செல்வத்தையும் இச்சிறு தொழில் வாழ்வினலழித்தல் நன்றோ? இத்தீநெறியை விடுத்து நல்வழியைக் கடைப்பிடித்து நீடூழி வாழ்வாயாக" என்றனர். அதற்குச் சூரன், "ஆயிரத்தெட்டண்டங்களுக்குத் தனியரசாகிய எனக்கு அழகிய சிறுபற்கள் இன்னமுந் தோன்றாத பாலனே இப்படியான புத்திகளைச் சொல்லத்தக்கவன்? வலிமிக்க அசுரர் வலியிலராம்; ஏழைத்தேவர்கள் வலியராம். மழலைச்சொற் பேசும் சிறுவர்தாம் ஒப்புயர்வில்லாத அரசற்குப் புத்திசொல்லுந் தகைமையுடையராம். இவ்வுலகவழக்கம் நன்றாக விருக்கின்றது.

மேலை யாயிரத் தெட்டெனு மண்டமும் வென்றே
யேலு கின்றதோர் தனியிறை யாகிய வெனக்குக்
கோல வாலெயி றின்னமுந் தோன்றிலாக் குதலைப்
பால னேகொலா மினையன புந்திகள் பகர்வான்.

(அவைபுகுபடலம் - ௧௧௩.)

முன் தேவர்கள் அசுரரை வருத்தினர். ஆதலால் நான் அவர்களைக்கொண்டு குற்றேவல் செய்வித்து அவர்களைச் சிறையில் வைத்தேன். இது என்குலத்துக்கு நான் செய்யவேண்டிய கடனாகும். ஆதலால் தேவர்களை விடுதலைசெய்யேன். நான் அப்பாலனது தந்தையாகிய சிவபிரானிடம் வச்சிரயாக்கையையும் பல வரங்களையும் பெற்றேன். இவற்றை அழிக்கத்தக்கவர் யாவர்? என் தம்பியாகிய தாரகனை அவன் கொன்றது நேற்றே யறிந்தேன். இங்குள்ளோர் சிலரையனுப்பி அவனுடைய உயிரை வாங்குவேன். நீ மூடனாதலால் உணர்ச்சியில்லாச் சிறுகுழந்தையின் வீண்சொற்களைக் கேட்டு என்பால் தூதனாக வந்தாய். உனதுயிரைக்கொண்டு ஓடிப்போ" என்றான்.

வீரவாகுதேவர் சொல்லுகிறார்: "முருகக்கடவுளின் பெருமையை யுணராது அவரைப் பாலனென்றாய். சிவபெருமானே தமது பேரருளாற் குமாரக்கடவுளாகிய குழந்தையாகத் தோன்றியருளினார். இதனுண்மையை அவருக்குமறுமுக மிருத்தலா லறிந்துகொள். வேதங்களுக்குமுன் வருவதாகிய பிரணவம் அவருடைய முகங்களுளொன்றாயின் அவருடைய பெருமையைச் சொல்லத்தக்கவர்யாவர்.

தாமரைக்கணான் முதலிய பண்ணவர் தமக்கு
மேமுறப்படு மறைக்கெலா மாதிபெற் றியனு
மோமெனப்படுங் குடிலையே யொப்பிலா முருகன்
மாமுகத்துளொன் றமவன் தன்மையார் வகுப்பார்.

(அவைபுகுபடலம் - கஈ௪.)

அவருடைய ஆணையின்றி ஓரணுவு மசையாது. அவருடைய வல்லமையைக் கடக்கத் தக்கவர் யாவர்? அவருடைய வேலாயுதமொன்றே உன்னுடைய ஆயுளை

யும் வலிமையையும் வரத்தையுஞ் சுற்றத்தையுஞ் சேனைகளையு மழிக்கத்தக்கது. தேவநிந்தைசெய்த உன் நாவைத்துணித்து உன்னுடைய உயிரை நான் எடுக்காமல் விட்டது எம்பிரானது ஆணையாகாமையா லென்பதை அறி. ஆயினுந் தேவர்களை விடுதலைசெய்து முருகப்பிரானது திருவடிகளை வழிபட்டு வருவாயாயின் நீயும் உன்னினத்தவருஞ் சுகமாக வாழலாம்.

ஏத மில்புவி யண்டங்கள் பெற்றன மென்றே
பேதை யுன்னினை சிறிதவன் தன்னருள் பெறுவோர்
பூத மைந்தினு மேனைய திறத்தினும் புறத்து
மீது மாமண்ட மெவற்றிற்கும் வேத்தியல் புரிவார்.

(அவைபுகுபடலம் - கஙக.)

பிருதுவிக் குரியனவாகிய ஆயிரகோடி யண்டங்களுட் கோடியி லொருபாகமாகிய ஆயிரத்தெட்டண்டங்களை உடைமையால் உன்னை ஒரு பொருளாக நீ நினைத்தாய். குமாரக்கடவுளது திருவருளிற் சிறிது பெற்றோர், பிருதிவிக்குரிய ஆயிரகோடி அண்டங்களுக்கும் மற்றைய நான்கு தத்துவங்களுக்குமுரிய சர்வ அண்டங்களுக்கும் (ஏனைய திறத்தினும்=) அசுத்தமாயையிலுள்ள எஞ்சிய பத்தொன்பது தத்துவங்களுக்குரிய அண்டங்களுக்கும், (புறத்தும்=) மிச்சிரமாயையிலுள்ள எழு தத்துவங்களுக்குரிய உலகங்களுக்கும், (மீதும் ஆம்=) அவற்றுக்கு மேலாய சிவதத்துவங்களைந்தினுமுள்ள புவனங்களுக்குந் தனியரசராவர்."*

---

* கச்சியப்பரது பாக்களாகிய படைகள் பகைவரைத் தாக்குங்கால் கூறுபடுத்துவதோடு நில்லாது நுண்பொடியாக்கும் வலிமையையுடையன. சூரனுடைய கருத்துஞ் செருக்கும் பொடியாயின. இவருடைய திருவாக்கு இவர் வணங்கும் மூர்த்தியினுடைய வேலாயுதம்போல் எஞ்சலின்றி ஒரேமுறையில் எக்கொடும்பகைவரையும் அடர்ப்பதாம்.

குமாரக்கடவுளது திருவருளிற் சிறிதுடையார் சூரனிற் கோடாநுகோடி மேலானவர்களென, கூடிய அருள் பெற்றோர் பெருமையும், பேரருள்பெற்றோர் பெருமையும், குமாரக்கடவுளது பெருமையும், மனம் வாக்குக் கெட்டாதன என்பதும், அவரோடு நோக்குங் காற் சூரன் ஓர் பொருளாகான் என்பதுங் காட்டப்பட்டன.

அதைக்கேட்ட சூரன், "பல்முளையாத மதலைச்சொற்களைப்பேசுமோர்குழந்தையினது தூதுவனென நினைந்து நான் உன்னுயிரைத் தந்தேன். தேவர்களைச் சிறையினின்றும் விடுங்கருத்துப் பொய்யான கனவிலுமெனக்குத் தோன்றிற்றிலது. நீ முறைகேடாகப் பேசியதற்காக உன்னைத் தண்டிப்பேன்" என்று சொல்லி அயலில் நின்ற ஆயிரம் வீரரைப்பார்த்துத் தூதரைச் சிறையில் வைக்குமாறு கட்டளையிட்டான். வீரவாகுதேவர் அந்த ஆயிரவரையும் ஓரே அடியாக அடித்துக்கொன்று, அவ்விடத்தால் அகன்று, வழியினின்றெதிர்த்த வீரரையுங் கொன்று நகரையுமழித்து முருகப்பிரானது திருமுன்னிலையை அடைந்து நடந்தவற்றைக் கூறினர்.

சூரபன்மன் தன்னகரத்தை முன்போலாக்குவித்துத் தன்னுடைய தம்பியையும், மக்கள், ஏனைய சுற்றத்தவர், மந்திரிமார், சேனபதி முதலியோரையுமழைத்து நடந்த வரலாற்றைக் கூறி, எத்துணை வீரரும் துணைவரோடு ஆராயாது பெருங்காரியங்களைச் செய்யாராதலிற் குமாரக்கடவுளோடு போர்செய்வதைப்பற்றி யோசித்தல் வேண்டுமென்றான்.

துய்த்திடுந் திருவினில வலியிற் சூழ்ச்சியி
லெத்துணைப் பெரியர்தா மெனினு மேலையோர்

கைத்தொரு வினைசெயக் கருதிற் றம்முடை
மெய்த்துணை யோரைமுன் வினவிச் செய்வரால்.
(சூரனமைச்சியற்படலம் - உஉ.)

அதைக்கேட்ட வீரர்களும் மக்களும் மந்திரிமார்களும், குமாரக்கடவுளைக் கொல்லுதற்குச் சூரன் போக வேண்டியதில்லையென்றும் தாங்களே போதியவர்களென்றும், தாரகன் சிவபிரானது வேலினாலும் கிரௌஞ்சம் அகத்தியரது சாபத்தாலும் அழிந்தமையை நினையாமற் சிறுபாலன் அழித்ததென்பது பேதைமை என்றுங் கூறினர்.

அப்போது சிங்கமுகாசுரன் சொல்லுகிறான், "இவர்கள் தங்களுடைய வலிமையைப் பாராட்டிக் கூறினர். உனக்கு வேண்டிய புத்தியைக் கூறினாரல்லர். நீரிலே சுகமாக வாழும் மீன் யோசனையின்றி வலைஞனுடைய உணவை விரும்பிப்போய் உயிரிழப்பதுபோலப் பின்வருவதை உணராமற் போருக்குச் செல்லக் கருதுகின்றனை. தேவருக்குத் துன்பஞ்செய்தோருள் அதனால் உயர்ந்தவர் யாவர்? அவர்களைக்கொண்டு மீன் சுமப்பித்தனையே! தம்முயிரிற் பற்றற்றவரன்றோ இத் தீத்தொழிலைச் செய்வர்! நீ இத்தீமைகளைச் செய்தலினாலன்றோ அறுமுகப்பிரான் உன்னோடு போர்செய்யத் திருவுளங்கொண்டார். உன் ஆயுளாகக் குறித்த நூற்றெட்டு யுகங்களும் முடிகின்றன. உன்னைச் சிவசத்தியே வெல்லும் என்று சொல்லப்பட்டது. அந்தச் சிவசத்தியாகிய வேலாயுதமே தாரகனைக் கொன்றது. தேவர்களைச் சிறையிட்டதினால் உனக்குத் துன்பமேயன்றி இன்பமில்லை. பெரியோர் சிறுதொழிலைச்செய்து வருந்துதலுண்டா? இப்போது நீ தேவர்களை விடுதலைசெய்யாயாயிற் குமாரக்கடவுள் எமது குலத்தையு மழித்து உன்னையுங் கொல்லுதல் திண்ணம்."

இதைக்கேட்ட சூரன் கோபங்கொண்டு, இடி இடித்தாற்போல் விடைகூறுகின்றான்: "சிவசத்தி என்னை வெல்லுமென்று சிவபிரான் சொல்ல நான் கேட்டதில்லை. நூற்றெட்டுயுகத்துக்கு அரசாள்வா யென்றனரன்றி அந்த எல்லையில் இறப்பாயென்று அவர் சொன்னாரல்லர். அவர் எனக்கு அழியாவரத்தையே தந்தனர். அதை அவருடைய சத்தி யழிப்பதெவ்வாறு? அவரும் சத்தியும் வேறல்லவே. தாரகன் அழியாவரம் பெறாதவனாதலால் இறந்தான். பிரம விட்டுணுக்கள் எனக்கஞ்சி ஒதுங்கி நிற்க, இச்சிறு பாலன் என்னை வெல்வான் என்பது சூரியன் ஒருபழமெனக் குருடன் காட்டக் கையில்லாதவன் அதைப்பிடிக்க ஆசைப்படுதல்போலாகும்."

அப்போது சிங்கமுகாசுரன் கூறுவான், "நான் இன்னமும் ஒன்று சொல்லுகிறேன். கோபமின்றிக் கேட்பாயாக. தூயவுள்ளமில்லாதார் அறிதற்கரிய ஞான மூர்த்தியாகிய சுப்பிரமணியப்பெருமானைப் பாலனென்றிகழ்ந்தாய். உலகங்களெல்லாம் அவரிலிருந்து தோன்றி அவரிலே ஒடுங்கும். அவருடைய பெருமையை நானும் நீயும் சொல்ல விரும்பின் அஃதெங்களாலாகுமோ. சதா நிஷ்டையிலுள்ள முனிவர்களும் அவரை உள்ளபடி யறிந்திலர். அவருடைய பெருந்தலைமையை அவரே இன்னு மறிந்திலர்."*

---

* அவருடைய பெருமையை அறிதற்கு அவருடைய சர்வ ஞானமும் போதியதன்றெனில், மின்மினியி னொளியையொத்த எமது சிற்றறிவா லறித லியலாததாகும். அவருடைய பெருமை இத்துணைத்தாயின் நாமவரோடு போர்செய்ய நினைத்தல் எத்துணைப் பேதைமை யென்றவாறு. பிற்செய்யுள் பேராற்றலுடையது. "எத மில்புவி யண்டங்கள்" எனத்தொடங்கும் வீரவாகுதேவரது திருவாக்கும் இச்செய்யுளும் ஒத்த வன்மையுடையன.

ஞானந் தானுரு வாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்து மென்றா லஃதெளிதோ
மோனந் தீர் கலாமுனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை.

(சூரனமைச்சியற்படலம் - கஉ அ.)

பிரமவிட்டுணுக்கள் மாயையிலகப்பட்டவர். இவர் மாயைக்குத் தலைவர். உனக்காயிரத்தெட்டண்டங் கிடைத்தனவென்று மகிழ்கின்றாய். நீ தத்துவபேதத்தை அறியாய். ஏனைய தத்துவங்களைச் சார்ந்த புவனங்களை நீ யறிவாயாயின் அவற்றை நினைந்து அதிசயப்படுவாய். பிருதுவிமுதல் நாதமீறாகவுள்ள தத்துவங்களைச்சார்ந்த அநந்தகோடி யண்டங்களையும் அவற்றிலுள்ள சேதனாசேதனப் பொருள்களையும் தமது சங்கற்பத்தால் ஓரிமைப்போதில் ஆக்கவும் அழிக்கவும் வல்ல அவரே உன்னோடு போர்புரியுந் திருவிளையாட்டுக்காகத் திருச்செந்திமாநகரி லெழுந்தருளி யிருக்கின்றனர்.

அன்ன வாகிய வண்டங்க ளனந்தகோ டியையுந்
தன்ன தாணையா லோரிமைப் பொழுதினிற் றரவும்
பின்னர் மாற்றவும் வல்லதோ ராதியம் பிரான்கா
ணுன்னொ டேபொரு மாடலாற் செந்திவந் துற்றான்.

(சூரனமைச்சியற்படலம் - கங௬.)

அன்றியும் உடம்பெடுத்தவைகள் யாவும் அழிவதே முறைமை. நீ மாத்திரம் அழிவில்லாதிருத்தலெவ்வாறு? நெடுங்காலம் இருக்கு முடலுக்கே அழிவில்லா யாக்கையென்று பெயர். நீ என்றுமுள்ளவனென் றெண்ணேல். ஆதலால் இப்போதே தேவரை விடுதலைசெய்வாயாக."

சூரன்கூறுவான்,

காற்றிற் றள்ளுண்டு நெருப்பினிற் சூடுண்டு கங்கை
யாற்றிற் றாக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு

வேற்றுப் பேர்முலை யுண்டமூ தேவினை யாடு
நேற்றைப் பாலனை யோபரம் பொருளென நினைந்தாய்.
(சூரனமைச்சியற்படலம் - கசச.)

கடவுள் என்றும் ஆன்மா என்றும் இருபொருள் இல்லை. ஆன்மாவுங் கடவுளு மொன்றேயாம். அநேக நீர்க்குடங்களில் ஒரே சூரியனின் நிழல் வெவ்வேறாகத் தோன்றுவதுபோல, பிரமமொன்றே பல உயிர்களாக விளங்கும். குடம் உடைய அதிலொடுங்கிய ஆகாயம் வெளியேயுள்ள மகாஆகாயத்தோடு ஒன்றுவதுபோல உடல்நீங்க உயிர்கள்யாவும் பிரமமாகின்றன. உடம்பின் பேதத்தினாலேயே பெரியவன் சிறியவ னென்ற வேறுபா டுண்டாவது. அறுமுகனும் பிரமம், யானும் பிரமம்; அவ்வளவில் ஏற்றத்தாழ்வில்லை; ஆயினும் அவனுடைய உடல் மென்மையானது, என்னுடல் வலிது. ஆதலால் நான் அவனிற் பெரியன். ஆதலால் நானவனை வெல் வேன்.* எம் முன்னோர்களைத் தேவர்கள் வருத்தியத னால் நாம் அவரை வருத்துகின்றோம். தீமை செய்தோ

---

* சூரன் தனக்குபதேசிக்கப்பட்ட மாயாவாதத்தின்படியே பேசுகிறான். மாயாவாதக்கொள்கைப்படி அவன் சொல்லியது முறையானதே. இதிலிருந்தும் மாயாவாதம் பதர்ச்சமயமென் பது பெறப்படும். சுக்கிரனுபதேசித்தலிலே கொன்ற மாயாவா தத்தை இதிலே ஆசிரியர் தகனஞ்செய்கின்றார். எக்கொள்கை யிலிருந்து உண்மைக்கு மாறான அனுமானங்கள் வருகின்றன வோ, அக்கொள்கை தவறானதென்பது தார்க்கமுறையாம். மாயாவாதக் கொள்கையிலிருந்து சூரன் குமாரக்கடவுளில் வலிய னென்று பெறப்படுகின்றது. அவன் அவரில் வலியனென்பது உண்மைக்கு மாறானது. ஆதலால் மாயாவாதம் பொய்ச்சமயமெ ன்பது பெறப்படும். இவ்வாறே மாயாவாதக்கொள்கையிலிருந்து தருமஞ்செய்தலும், பாவஞ்செய்யாமையும் மூடத்தன்மையென வும், கொலை களவு காமம் முதலியன செய்யத்தக்கவை என்பதும் அனுமானிக்கப்பட்டன. இவற்றாலே மாயாவாதம் பொய்ச்சமய மென்பது உள்ளங்கை நெல்லிக்கனியோலக் காட்டப்பட்டது.

ரைத் தண்டித்தல் அரசமுறையென நீதிநூல்கள் சாற்றும். ஆதலாற் சிவபெருமான் வந்தாலும் எதிர்த்துப் போர்செய்வதே என்முடிபு. பலவற்றைப் பேசியாவதென்? என்னுடன் பிறந்த நீ என் பகைவர் பக்கமாக எனக்கு மாற்றானாகில் வேறு பகைவரு மெனக்கு வேண்டுமோ! எங்கள் குலத்துக்குரிய வன்மையும் வீரமுங் கெட்டுத் தேவர்கள் போலானாய். தவமும் மோனமுமே உனக்குத் தக்கவை. நீ உன்னூருக்குப்போய் அங்கு சுகமாக வாழ்ந்துகொள். நான் போருக்குத் தனியே சென்று சுப்பிரமணியனை வெல்வேன்."

அதைக்கேட்ட சிங்கன், "அறிவிலார்க்குரைப்பவரவரிற் பேதையோர்" என்று சிந்தித்துச் சூரனுடைய காலில் விழுந்து வணங்கி, "என்பிழையைப் பொறுத்தருள். நான் போருக்கு உன்னோடுசென்று சத்துருக்களைக் கொல்வேன்" என்றான். சூரன் மகிழ்ந்து அவனை மார்போடணைத்துப் போருக்காயத்தஞ் செய்யுமாறு கட்டளையிட்டான்.

---

# யுத்தகாண்டம்.

---

நாரண னென்னுந் தேவு நான்முகத் தவனு முக்கட்
பூரணன் றானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
யாரண முடிவுந் தேறா வகாதியா யுயிர்கட் கெல்லாங்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.

இக்காண்டம் சூரனுடைய போரையும் அதன் முடிவையுங் கூறுவது. போரை விரித்துக்கூறுமிடத்து அதன் முறைகள் அதற்குரிய கருவிகள் வீரரின் ஆண்

மை முதலிய யாவும் சொல்லப்படுகின்றன. ஆயுதமில்லாதவனோடு பொருதலும் தேரில்லாதானோடு தேருடையான் போர்செய்தலும் பின்காட்டுவோனைக் கொல்லுதலுந் தகாதனவாம். பெரும்போர்களிற் சேனைகள் முதலிலும் சேனைத்தலைவர் பின்னும் போர்த்தலைவர் அவர்களுக்குப் பின்னும் போர்செய்யும் முறை இருந்தது. இவ்வரையறைகடந்து நடப்பது சிறுபான்மையுண்டு. யந்திரத்தேர்களும் ஆகாயவிமானங்களும் போரில் உபயோகிக்கப்பட்டன. ஆயினும் இந்திரஞாலம்போன்ற மந்திரத்தேர்கள் அரியனவே. போர்க்கருவிகளுள் வில்லாற் செலுத்தப்படும் அம்புகளும் யந்திரத்தாற்செலுத்தப்படும் ஆயுதங்களும் தண்டம் வேல் சூலம் முதலிய எறிகருவிகளும் மலியக் காணப்படுகின்றன. போர்த்தலைவர் தெய்வப்படைகளையே பெரும்பாலும் பயனபடுத்தினர். தெய்வப்படைகள் மந்திர வன்மையுடையனவாய் எப்பக்கமுஞ் சென்று செலுத்துவோர்பால் மீளத்தக்கவை. இவற்றுட் சிறந்தது சிவப்படைக்கலம். இவைகளைச் செலுத்துமுன் இவைகளுக்குப் பூசனைசெய்தல் முறைமையாம். வீரர்கள் சிறிதுஞ் சினமின்றிப் போர்புரிதலுண்டு. அவர்கள் பகைவரோடு ஆறுதலாக நீதிமொழிகளைப் பேசுவர். எத்துணைக் கேடுசெய்தவரையுங் கொல்லாதும் விடுவர். வீரவாகுதேவர் சூரனுடைய நகரை அழித்து அவன் மக்களையுங் கொன்றாராயினும் அவர் தூதராகப்போன ஒரு தன்மையை நினைத்துச் சூரன் போர்க்களத்திலும் அவரைக் கொன்றிலன்.

அங்கை கொண்டுசூ ரொருபுடை புடைத்தலு மகலம்
பொங்கு சோணித மலைத்திட வாகையம் புயத்துச்

*சிங்கம் வீழ்ந்தயர் வுற்றிடத் தூதனைச் செகுத்த*
*லிங்கெனக்கடா தென்றெடுத் தும்பரி னெறிந்தான்.*
(சூரபன்மன்வதைப்படலம் - களO.)

போர்செய்வோர் முதலிற் சிறுபாணங்களைச் செலுத்தி அவை பயன்படாக்கால் வலிய பாணங்களை உபயோகிப்பர். அதன்மேற் றெய்வப்படைகளை ஏவுவர். பகைவரை எதிர்க்குங்கால் முதலிற் சிறியோரும் பின்னர் வலியோரும் போவது வழக்கம். இவற்றாற் போர்புரிவோரது வலிமையு மாற்றலும் அளக்கப்படும்.

சூரனுஞ் சிங்கனும் வச்சிரயாக்கையுடையோரானமையால் வீரவாகுதேவர் அவர்களது தேரையும் வில்லையுந் துணித்தனரன்றி அவர்களுடைய உடலுக்கு ஊறுசெய்ய இயலாதவராயினர். அவர்களின் உடலிற்பட்ட பாணங்கள் யாவுந் துகளாயின. இலக்கரும் எண்மரும் அவர்களின்மேல் விட்ட சரங்கள் பூமாரிபோலாயின என்றும், மலையைக் குடையும் வண்டுகளையும் இன்பத்தையும் அறத்தையும் ஈட்டாது வாளாகிடந்து வீண்போகும் பொய்யர்செல்வத்தையும் ஒத்தனவென்றும் சொல்லப்பட்டமை நோக்கத்தக்கது.

*பூதர்க ளிரிவு நோக்கிப் பொருதிற லிலக்கத் தெட்டு*
*மேதகு வீரர் யாரும் வெய்யதேர் கடாவிச் சென்று*
*நீதறு சிலைகள் வாங்கிச் சீயமா முகவற் சுற்றித் [ளூர்.*
*தாதவிழ் மலர்பெய் தென்னச் சரமழை பொழித வுற்*
(சிங்கமுகாசுரன்வதைப்படலம் - கஎகூ.)

*ஆண்டேவரு மயன்மால்படை யவுணன்றட மார்பங்*
*கீண்டேகுது மென்றேயவன் கிளர்தாரக லத்தின்*
*மூண்டேசின மொடுதாக்கிய முழுமாமணி வயிரச் [வே.*
*சேண்டோய்கிரி துளைப்பான்முயல் சிறைவண்டின மெனு*
(இரண்டாநாட் சூரபன்மன்யுத்தப்படலம் - உOஎ.)

சிங்கனுடைய மார்பை நோக்கிச் சென்ற பாணங்கள் ஈயாது வீட்டினுள் மறைவோரிடஞ் சென்று திரும்பும் வறியோரைப்போல அவன் மார்பிற்பட்டுத் திரும்பின. சூரனுடைய உடம்பைத் தேவப்படைகள் தாக்க நாடுதல் வடவைநெருப்பைத் தேனீகள் தசையெனச் சேருதலை ஒத்ததென்ப.

*ஊனீத்திடு தவவிண்ணவ ருலகம்புக முயன்மா*
*ருனீத்துள படையென்னிடை சார்கின்றதொர் தன்மை*
*மாநீத்தமெ லாமுண்டிடு வடவைத்தழ லதனைத்*
*தேனீத்தொகை தசையீதெனச் சேருந்திற னன்றே.*
(இரண்டாநாட் சூரபன்மன்யுத்தப்படலம் - உகக.)

இவர்களது உடலம் குமாரக்கடவுளது அம்புகளால் மாத்திரம் ஊறுபட்டன. ஆயினுஞ் சிங்கனது தலைகள் அறுக்கப்பட்டு விழவிழப் புதுத்தலைகள் தோன்றின. ஆதலால் அவனைக் கொல்லுதற்கு அவனுடைய நெஞ்சு கிழிக்கப்படவேண்டியதாயிற்று. சூரன் வேலொன்றினால் மாத்திரந் தாக்கமுற்றனன். அவ்வேலினால் அவன் மெய் பிளக்கப்பட்டபோதும் அவ்விருகூறுகளும் சேவலாகவும் மயிலாகவும் வந்து பின்னும் போர்செய்யக் கருதின. அசுரவீரர்கள் பலமுறையும் மாயையினால் வெற்றிபெற்றனர். வீரவாகுதேவர் ஞானத்தைப்பெறாத சிவகணநாதராதலால் மாயப்படைகளாற் பலகால் வாதிக்கப்பட் டறிவிழந்து தோல்வியுற்றனர். எண்மரும் இலக்கத்தவரும் அசுரசேனாதிபதிகள் பலரையும் வாட்டிய பெரியோராயினும் வீரவாகுதேவர்க்குக் கீழ்ப்பட்டோரே.

முருகக்கடவுள் பலவாறாக நினைத்தாரென்றதும் சிவபிரான்வரினுந் தேவர் சிறைநீங்கார்ரென்ற சிங்கனது

கூற்றும் பௌராணிகமுறையாம். பௌராணிகமுறை பதிக்குப் பசுலக்கணங்களைச் சார்த்துதலும் சிறப்புக் கருதிப் பொருட்களைப் பெருப்பித்தலுமாம். முருகப் பிரானுக்குப் பலவகையான எண்ணங்கள் வந்தன என்றால் அவர் மாறுதலடைபவரெனமுடியும். பசுக்களே மாறுதலடைவன. ஆதலால் இக்கூற்று பதிப்பொருளுக்குப் பசுலக்கணங்களைச் சார்த்துதலாகும்.

நூலாசிரியருக்குத் தமிழிலுள்ள பற்றும் மதிப்பும் எல்லையில்லாதன. அகத்தியமுனிவரைக் கூறுமிடத்துப் பலகாலும், முருகப்பிரானைச் சிறப்பிக்குங்காற் சிறுபான்மையும், தமிழின் பெருமை பாராட்டப்படுகின்றது. அகத்தியர் தமிழைக் கற்றோரெனவும் முருகப்பிரான் தமிழை வளர்த்தோரெனவும் புகழப்படுவர்.

ஆசிரியர் சூரன் சிங்கன் முதலியோரது பெருமையைப் பாராட்டுமுகத்தாற் குமாரக்கடவுளது பெருமையை ஒருவாறு விளக்குகின்றனர். விஷ்ணுமூர்த்தி செலுத்திய சக்கரப்படை தாரகனிலே பதக்கமாக நிலவிய தன்மை தாரகனது உயர்வைக் காட்டும். பூதங்கள் கடலிற்போகக் கடல்நீர் அவர்களது காலையும் மறைத்திலது. இத்துணைப்பெரும் பூதங்கள் சிங்கனது வயிற்றிலிருந்து தவஞ்செய்யக் கருதினவெனலாற் சிங்கனது பெருமை ஒருவாறு துணியப்படும். சிங்கனில் வலியோன் சூரன். சூரன் முருகக்கடவுளது திருவடியைச் சாரற்கே தகுதியுடையோன். இதனாற் குமாரக்கடவுளது பெருமை ஒருவாறு தெளியப்படுகின்றது. ஆதலால், இவ்வுலகிற் பெரியாரெனக் கருதப்படுவோரது முகமலர்ச்சியையுந் தயையையும் பெறுதற்குப் பெருநோன்பு செய்வோர் குமாரக் கடவுளை அத்துணைச் சிரத்தையோடு நாடுவாராயின்

அவர் பெறத்தக்க சிறப்புக்கும் பெருமைக்கும் அளவில்லை என்பதும், குமாரக்கடவுளை அத்துணைச் சிரத்தையி னும் பல்கோடிமிக்க ஆர்வத்தோடு வழிபடல் கடவு கும் என்பதும் பெறப்படும்.

சூரனுடைய போர்த்தலைவருட் போருக்கு முதற் சென்றோன் அவன் மகனாகிய பானுகோபனே. இவனை எதிர்த்துச் சென்றவர் வீரவாகுதேவர். முதல்நாளிற் பானுகோபன் வீரவாகுதேவரைப் போரில் வெல்லமாட் டாதவனாய் அறிவைக்கெடுப்பதாகிய மோகப்படையை விட்டு அவரை மயக்கினன். அப்பொழுது குமாரக்கட வுள் அமோகப்படையை விட்டு அதன் வலியைக் கெடு த்து அவரைத் தெளிவித்தனர். வீரவாகுதேவர் பின் னும் போர்செய்யத் தொடங்கிப் பானுகோபன்மேற் செலுத்தற்கு சிவப்படையை எடுத்தனர். எடுத்தலும் பானுகோபன் அதைக்கண்டு அதனையொத்தபடை தன் பாலின்மையால் அது தன்னைக் கொல்லுமென அஞ்சிப் போர்க்களத்தினின்றும் அருவமாக நீங்கித்தன்னகருக் கேகினன்.

இதைச் சூரன் அறிந்து இப்போரை முடித்தற்குத் தானே செல்லவேண்டுமென்று தீர்த்து, அடுத்தநாள் வைகறையில் நித்திய அநுட்டானத்தை முடித்துப் போர்க்களத்துக்குப் போனான். அங்கு அவன் வீரவா குதேவர் முதலியோர் யாவரையும் வென்றனன். அப் போது முருகப்பிரான் போருக்கெழுந்தருளினார். இத னைக் கூறுமிடத்து ஆசிரியர் முருகப்பிரானைத் துதிக்கு முகத்தாற் சூரனைப் புகழ்கின்றனர்.

முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகமுங் கண்ணுங்
குண்டல நிரையுஞ் செம்பொன் மவுலியுங் கோல மார்பு

மெண்டரு கரமீ ராறு மிலங்கெழிற் படைகள் யாவுந்
தண்டையுஞ் சிலம்பு மார்க்குஞ் சரணமுந் தெரியக்
கண்டான்.

பூவுல கண்ட மெல்லாம் புரந்திடுஞ் சூரன் றன்னைத்
தீவினை யாள னென்றே செப்புவர் சிறப்பின் மிக்க
மூவிரு முகத்து வள்ளன் முன்னர்வந் தெய்தப் பெற்று
னுவிவன் றவத்திற் கன்றி யறத்திற்கு முதல்வ னன்றோ.

(இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலம்-௨௩௫,௰௩௮)

குமாரக்கடவுள் போர்க்களத்திலே தோன்றியது சூரன் முதலியோருக்குப் பேரருள்பாலிக்குந் திருவிளையாடல் என்ப. உயிர்கள் யாவுங் கடவுளோடு நோக்குமிடத்து சூரியப்பிரகாசத்தின் முன் இல்லாததாகும் மின்மினியினொளியை ஒக்கும். ஆதலாற் சூரனாயினும் அவனின் மேலோனாயினும் குமாரக்கடவுளின் முன் சூனியமெனவே தகும். அங்ஙனமாதலின் குமாரக்கடவுள் சூரனோடு வெறும் போர் செய்தனரென்பது சிறிதும் பொருத்தமில்லாததாகும். ஆதலாற் குமாரக்கடவுளது போர் சூரனை அடிமைக்கொள்ளும் பேருளே யென்பதை ஆசிரியர் விளக்குகின்றனர்.

பொருசமர் விளைப்பான் போலப் பொருக்கெனப் போந்து சூர, ளிருவிழி தன்னிற் காண்பா னெளி துதன் வடிவங் காட்டி, யருளது புரிந்தா னென்னி னுதியங் குமரன் மாயத், திருவிளை யாடல் யார்க்குந் தெரிகில போலு மன்றே.

(இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலம் - ௨௪௦.)

ஆசிரியர் புராண உண்மைகளை இவ்வாறு வேண்டிய இடங்களில் விளக்கிக் கற்போரது மயக்கத்தைத் தீர்க்கும் அருள்வழக்குடையார். போர் தொடங்கிய

பின் குமாரக்கடவுள் சூரன்விட்ட படைகள் யாவற்றை யுங் களைந்து அவனை நிராயுதனாக்கியருளினார். அப்போது சூரன் குமாரக்கடவுளுடைய பெருமையை ஒருவாறறிந்து அவரை மனதிலே புகழ்ந்தான். அப்போது குமாரக்கடவுள் அவனைநோக்கி, "இவ்வேலினால் ஒரு கணத்தில் உன்னைக்கொல்லுதல் சாலும். நீ படையின்றி நிற்பதால் அது செய்கிலேம். தேவர்களைச் சிறையினின்று நீக்குவையாயின் நீ உயிரோடு வாழ்வை" என்று திருவாய்மலர்ந்தருளினார். சூரன் தனக்கழியாவரமிருத்தலால் தான் சும்மா நிற்பினுங் குமாரக்கடவுள் தன்னைக் கொல்லுதல் நேராதெனநினைந்து விடைகூறாது நின்றனன். பின்னர் அவன் வேறுசேனைகளோடும் படைகளோடும் வந்து போர்செய்வதே தக்கதென்றெண்ணி மறைவாகப் போர்க்களத்தினின்று நீங்கித் தன் நகரத்தை யடைந்தான்.

மூன்றாநாள் பானுகோபன் வீரவாகுதேவரோடு போர்செய்து ஈற்றிற் சிவப்படையை ஏவினன். வீரவாகுதேவரும் அதனைச் செலுத்தினார். அப்படைகளின் வலிமை இருபத்தைந்து கவிகளிற் கூறப்படுகின்றது. அப்படைகள் பின்னர் அவரவர்பால் திரும்பின. அதைக் கண்ட பானுகோபன் மாயப்படையைச் செலுத்தினான். அது யாவரையும் மயக்கிற்று. அவன் தந்தையாகிய சூரனிடம் வெற்றியோடு சென்று தன் செயலைக் கூறினன். சூரன் அதைக்கேட்டு மகிழ்ந்து அவனை மார்போடணைத்து அவன் வலிமையைப் புகழ்ந்து அன்புமொழி கூறினன். குமாரக்கடவுள் வேலாயுதத்தை விட்டு மாயப்படையின் வலியைக் கெடுத்து வீரவாகுதேவர்முதலிய யாவரையும் மீட்டருளினார்.

அடுத்தநாள் சூரன் தானேபோருக்கேகக் கருதி ஞன். அதை அவன் மகளுகிய இரணியன் அறிந்து அவனிடஞ் சென்று கூறுவான், "நாம் தேவரைச் சிறை வைத்தமை தீச்செயலேயாம். அதன்பயன் நமதுசெல்வ மும் உயிரும் தொலேவதே உன்னுடைய செல்வமும் பிரமவிட்டுணுக்களே வென்ற உன்வலியும் நீ பெற்றது சிவபிரானிடமன்ருே. அந்தப்பெருமான் உன்னுடைய தீச்செயலின் பயனுக உன்பெருமைகளேப்போக்கத் திரு வுளங்கொள்வாராயின் அவரை வணங்கி அவருடைய விதிகளுக்கடங்கி நடத்தலன்ருே நன்று. அவரோடு போர்புரியக்கருதுவது தக்கதா?

ஒன்ருெரு பயன்றனே யுதவி ஞேர்மனங்
கன்றிட வொருவினே கருதிச் செய்வரேற்
புன்ருெழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ.

ஆதலா லீசன் றன்னே யடைந்தவ ருய்வ ரல்லாப்
பேதையர் யாவ ரேனும் பிழைக்கல ரினேய வாய்மை
வேதநூல் பிறவுங் கூறும் விழுப்பொரு ளாகு நீயு
மேதமா நெறியி னீங்கி யிப்பொரு ளுணர்தி யெந்தாய்.
(இரணியன் யுத்தப்படலம்—கO, உO.)

சிவபிரானது திருவருளே எதிர்க்க நினேந்தோர் யார்தாம் வாழ்ந்தனர். அன்றியும் முருகப்பிரானது திரு வருட்சிறப்பை நீ நன்ருக அறிவாய். அவருடைய சிறிய நகையல்லவோ கற்பகாலத்தில் உலகங்களேப் பொடியாக்குவது. வருந்துவோரைக் காத்தற்கல்லவோ அவர் திருவுரு எடுத்தனர். நாம் இப்போதே தேவர் களேச் சிறையினின்றும் நீக்கிக் குமாரக்கடவுளிடஞ் செ ன்று அவருடைய திருவடிகளேப்பணிந்து நாம்செய்த

குற்றங்களைப் பொறுக்குமாறு வணங்குவோமாயின் அவர் எம்மில் திருவருள் பாலித்து எம்மை நன்னிலைப் படுத்துவர். நாம் உய்வோம். இதுவே செய்யத்தக்கது."

இவ்வாறு இரணியன் உண்மைகளைக் கூறச் சூரன் கேட்டு வெகுண்டு சொல்லுகின்றான், "நீ இங்கு நின்று என்சத்துருக்களின் வலிமையைப் பாராட்டிப் பேசுகின்றாய். உனக்கிது கற்பித்தோரை அறிவேனாயின் அவர்களைக் குலத்தோடழித்துவிடுவேன். பிரமா எனக்குப் பஞ்சாங்கஞ்சொல்லிப் போகின்றான். விட்டுணு என் தம்பிக்குப் பயந்து கலங்கினவன் தேவர்களது தலைவன் மீன்சுமந்தனன். இப்படிச் சகலரும் எமது பணியைச் சிரமேற்கொண்டு செய்யச் சீகண்டரது மகனோ என் பேராற்றலை நீக்கத்தக்கவன். நான் பெற்ற அழியா வரத்தின் பெருமையை யறியாய். நீ பகைவருக்குப் பயந்தாய். இனி இப்படிப் பேசுவாயாயின் உன்னை யமலோகத்துக் கனுப்பிவிடுவேன்."

இரணியன் மனம் வருந்தி விதியை வெல்ல ஒருவராலும் இயலாதென்றும் தந்தையிறக்குமுன் தானிறப்பதே தக்கதென்றும் நினைந்து அவனுடைய கால்களில் விழுந்து வணங்கித் தந்தைக்குமுன் தானே போருக்குச் செல்வதாகச் சொல்லி யுத்தகளத்துக்குப் போனான். போரிலே அவன் தோற்றுக் களைத்தசமையத்திற் பின்வருமாறு நினைத்தான்:—எனது தந்தையார் முருகக்கடவுளது வேலாலிறப்பது திண்ணம். மற்றைச் சுற்றத்தவரும் இறந்துபோவார்கள். அசுரர்களுள் ஒருவரும் எஞ்சார்கள். அப்படியே எனது தந்தையாரிறந்த பின் அபரக்கிரியை செய்தற் கொருவருமிலராகில் இறந்தவருக்குப் பெரும்வசையாகும். நான் போர்முகத்தி

விருந்து போர்செய்யாதோடின் எனக்குவசை உண்டாகும். எனக்கு வசைவரினும் வரலாம். எனது தந்தையாருக்கு வசைவரலாகாது.

என்னை யெய்து மிசையது வேயெனின்
மன்னை யெய்தும் வசையுரை யாங்கதன்
றென்னை யெய்தினு மெய்துக தந்தைபா
லன்ன தாத லழகிதன் றுலெனு.

(இரணியன்யுத்தப்படலம்—கஉ-அ)

ஆதலால் நான் பிதுர்க்கடன்களைச் செய்து எந்தந்தையரை மேன்மைப்படுத்தற்காக உயிரோடிருத்தல் வேண்டும். இவ்வா றெண்ணிக்கொண்டு அவ்விடத்தினின்றும் நீங்கிக் கடலுட்புகுந்து அங்கு மீன்வடிவத்தோடு மறைந்து வாழ்ந்தான்.

பின்னர் அக்கினிமுகன் போருக்குச்சென்று வீரவாகுதேவரின் தம்பியராகிய இலக்கவீரரையும் எண்மரையும் கொன்முன். அதைக்கண்ட வீரவாகுதேவர் அவனைக் கொன்றுவிட்டு யமனையழைத்து "எனது தம்பியருடைய உயிரை எடுக்க நீ நினைத்த தெவ்வாறு?" என்று கோபித்துக் கேட்டார். அதற்கு அவன் அஞ்சி "திருநீறு உருத்திராட்சம் அணிந்தவரைக்கண்டு பயப்படும் யான் தேவரீரது தம்பியரைத் தொடுவேனு? எத்துணைப் பசிவரினும் யாரேனும் நெருப்புப் பொறியை யுண்பாரோ? அவர்களுக்கு யாதொருதீங்கும் நேர்ந்திலது. அவர்கள் கைலாசத்திலிருக்கின்றனர்" என்முன்.

அங்க மீதினி னீறுகண் டிகையிலை யணிந்தார்
தங்கள் பாலினுஞ் செல்லுதற் கஞ்சுறுந் தமியே
னிங்கு நின்னிளை யாருயிர் கொள்வனோ வெவரும்
வெங்க னற்பொறி யுண்பரோ பசிப்பிணி மிகினும்.

(அக்கினிமுகாசுரன் வதைப்படலம்—உஉஎ)

பின்பு முருகப்பெருமானது திருவருளால் அவர்கள் சிவலோகத்திலிருந்து மீண்டுவந்தனர்.

சூரனது ஏனைய மக்களும் வீரர்களும் இறந்துபோனதைக்கண்ட பானுகோபன் சூரனிடம் போய், போர் செய்வதுவீணென்றும் தேவர்களை விடுதலைசெய்வதே தக்கதென்றுங் கூறினன். அதற்குச் சூரன் "கூன் குருடு ஊமை எனப்படும் வசைகள் அவ்வவ்வுடலோடழியும். மானங்கெட்டு வலியிழந்தவசை எழுபிறவியிலுந் தீராது. இனம் செல்வம் ஆக்கை யாகிய இவைகள் நிலைபற்றவை. இவை யொருங்கே அழிக்கப்படினும் யான் எடுத்த கருமத்தை விடேன். இந்தச் செல்வத்தையும் உயிரையும் நான் பொருளென மதியேன். பிறந்தவர் யாவருமிறப்பது திண்ணம். இவர்களுக் கஞ்சி நான் உயிர்சுமந்து வாழேன்.

**இன்னுமோ ரூழி கால மிருக்கினு மிறப்ப தல்லாற், பின்னுமிங் கமர்வ துண்டோ பிறந்தவ ரிறக்கை திண்ண, மின்னெனும் வாழ்க்கை வேண்டி விண்ணவர்க் கஞ்சி யிந்த, மன்னுயிர் சுமக்கி லேன்யான் மாயவன் றனையும் வென்றேன்.** (பானுகோபன்வதைப்படலம்—உஅ)

நீ உன் வீட்டுக்கேகிச் சுகமாக வாழ்ந்திரு. போருக்கு நானே போகின்றேன்" என்றான். பானுகோபன் தந்தையாருடைய துர்ப்புத்தியைக் கண்டு துன்புற்று "நான் இதோ போருக்குப் போகிறேன்" என்று சொல்லிப் போனான். போரிலே அவன் வீரவாகுதேவராற் கொல்லப்பட்டான். வீரவாகுதேவர் குமாரக்கடவுளது திருமுன்னிலையை யடைந்து அவருடைய திருவடிகளைப் பலமுறை வணங்கினின்றார். குமாரக்கடவுள் அவருக்குத் திருவருள்பாலித்து விரும்பிய வரத்தைக் கேட்கு

மாறு கட்டளையிட்டருளினார். அப்போது அவர் வேண்டியதாவது:—

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திர னரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்மையே வேண்டுவன் றமியேன்.
(பானுகோபன்வதைப்படலம்—கருச)

சூரன் பானுகோப னிறந்ததை யறிந்து அழுதான். அழியாவரத்தைப் பெற்றது தனக்குத் தீமையாயதென்றும், தன்னுடைய உடம்பழியுமாயின் தான் உயிர்துறந்து தன்னை வருத்தும் புத்திரசோகத்தினின்றும் நீங்கலாகுமென்றும் பலவாறு சொல்லி அலறினான்.

வெற்றி யுளமதலை வீந்தால் விளியாமன்
மற்று மெனதுயிரும் வைகும் வலிதாகச்
செற்றிடலு மாகாதென் செய்கே னழியாமற்
பெற்ற வரமும் பிழையாய் முடிந்ததுவே.
(பானுகோபன்வதைப்படலம்—களரு)

பின்பு அவன் சிங்கமுகனைப் போருக்குப் போகுமாறு கட்டளையிட்டான்.

அதற்குச் சிங்கன் "நான் முன் சொல்லியவற்றை நீ நஞ்சாகக் கொண்டதால் உன் மக்களும் அமைச்சரும் பெரும்வீரர்களும் மாய்ந்தனர். ஆயினும் உன் கட்டளைப்படி நானும் போருக்குச் செல்வேன். கந்தசுவாமியாராற் கொல்லப்படாது தப்புவேனாயின் இங்கு திரும்புவேன். கொல்லப்படில் யாவருமிறப்பர். உன் கருத்தே நடைபெறுக" என்று சொல்லிப் போருக்கேகினான்.

போர்க்களத்துக்குப் போனபோது சிங்கனைப் பூதங்கள் எதிர்த்தன. அவன் அவற்றை வாரி விழுங்கினான். அவற்றுட் சில வயிற்றிலும் சில நெஞ்சிலும் சிலகழுத்திலுந் தங்கின. வயிற்றிலே தங்கிய பூதங்கள் அவ்விடம் விசாலமாகவும் மனதைக் கவரும் வேறு பொருள்களின்றியும் இருந்ததால் அவ்வயிறு சிவத்தியானத்துக்குத் தக்க இடமென்று நினைத்தன. அவனது தொண்டையில் தங்கியவை அவன் வெளிமூச்சுவிட அம்மூச்சினால் வெளியே வீசப்பட்டன. அதைக்கண்ட வீரவாகுதேவர் அவனோடு போர்செய்து அவனது தேரையும் வில்லையும் அறுத்தனர். அப்போது அவன் மாயாபாசத்தை விட்டு வீரவாகுதேவரையும் ஏனையோரையுங் கட்டுவித்தான். பின்பு குமாரக்கடவுள் வாத்தியங்க ளொலிக்கப் போர்க்களத்துக் கெழுந்தருளி அங்கு சிங்கன்முதலியோரோடு போர்செய்யுந் திருவிளையாடலைத் திருவுளத்திற் கொண்டனர்.

ஒருத்தனை யாகியே யுலகெ லாமடு
திருத்தன தருண்மக னேரலா ரொடுஞ்
செருத்தொழில் புரிவதோர் சிறிய வாடலைக்
கருத்திடை யுன்னினன் கணிப்பி லாற்றலான்.

(சிங்கமுகாசுரன்வதைப்படலம்—௩௪0)

சிங்கன் அவரைப்பார்த்துப் "பகைவரை யடக்குதல் அரசரது கடனேயாகும். அவ்வாறு நாம் எமது பகைவராகிய தேவரைத் தண்டித்தோம். நீர் தேவரல்லீர். நீர் எம்மோடு போர்புரிய வந்த காரணமென்ன" என்றான். அதற்குக் குமாரக்கடவுள் "எளியாரை வலியார் மெலித்தால் வலியாரைத் தெய்வம் தண்டித்து உலகங்கள் யாவையும் நடைபெறச்செய்யும் முறைப்படி, தேவர்

களைச் சிறைநீக்குதற்காகப் போருக்கு வந்தோம்" என்று சொல்லியருளினார். அதன்பின் போர் தொடங்கிற்று. குமாரக்கடவுள் அவனில்விட்ட பாணங்கள் அவனுடைய நெஞ்சைக்கிழிக்க நெஞ்சினுள்ளிருந்த பூதங்கள் புற்றிலிருந்து புறப்படுஞ் சிதல்போலக் கொடிகோடியாக வெளியே வந்தன.

கற்றையங் கதிர்வே லண்ணல் காமரு பகழி பாய,
மற்றவன் புறனு மார்பும் வாயில்க ளாத லோடு, மற்
றது நோக்கித் தீயோ னகட்டுறை கணங்கண் முற்றும்,
புற்றெழு சிதலே யென்ன வக்நெறி துருவிப் போந்த.

(சிங்கமுகாசுரன்வதைப்படலம்—௩௬0)

பின்பு குமாரக்கடவுள் ஒரு பாணத்தை விட்டு மாயவலையைக் கெடுத்து அதனாற் கட்டப்பட்டிருந்த வீரர்யாவரையும் மீட்டருளினார். அவர்கள் அவருடைய திருமுன்பு வந்து வணங்கிநின்றனர். அப்போது அவர் அவர்களுக்கருட்பார்வைசெய்து மிக வருந்திவிட்டீர்கள்போலும் என்றார். அதற்கு அவர்கள் "எப்படி அறிவுகெடினும் நரகத்துக்குப் போகினும் எப்பிறவி எடுக்கினும் தேவரீரது திருவருளுண்டாயின் எமக்கோர் குறைவுமில்லை" என்றனர்.

முந்தை யுணர்வு முடிந்தாலென் னாருயிர்போ,
யந்த நிரயத் தழுந்தி யயர்ந்தாலென், வெந்துயர
மூழ்கி வினைப்பிறவி புக்காலென், னைந்தை யருளுண்
டேலெமக்கென் குறையென்றார்.

(சிங்கமுகாசுரன்வதைப்படலம்—௩எரு)

பின்பு குமாரக்கடவுள் சிங்கனுடைய கைகளையுந் தலைகளையும் வெட்டியருளினார். அவனுடைய தவவலியால் அக்கைகளுந் தலைகளும் உடனே மறுபடியுந் தோ

ன்றின. பின்னர் குமாரக்கடவுள் குலிசாயுதத்தை விட்டு அவனுடைய மார்பைப்பிளந்து அவனைக் கொன்றருளி னார்.

சூரன் தன் தம்பியாகிய சிங்கன் இறந்ததை யறிந்து அழுது பலவாறு புலம்பினன். அப்புலம்பல்கள் அன்பு மார்வமும் நிறைந்தவை. புலம்பிக் கவலை ஒருவாறு குன்றியபின் கோபங்கொண்டு போருக்குச் சென்றான். அங்கு நின்று குமாரக் கடவுளிலே சரமாரி பொழிந்தான். அவன் செலுத்திய அப்பாணமெல்லாம் சிவபெருமானுக் கெதிராகச்சென்ற காமனைப்போற் சாம்பராயின.

உட்டெளி வுற்றோர் காணு மொப்பிலா முதல்வன் றேண்மேல், விட்டிடு பகழி முற்றும் வெந்துவெந் துகள தாகிப், பட்டன திசைகண் முற்றும் பரந்தன பரத்தின் மேலோன், கட்டழ லதனுன் மாய்ந்த காம வேள் யாக்கை யேபோல்.

(சூரபன்மன் வதைப்படலம்—உ௱கூ)

அவன் மாயையாற் பல இடங்களுக்குஞ் சென்றான். அங்கெல்லாங் குமாரக்கடவுள் எழுந்தருளினார். அவருடைய படைகள் அசுரச்சேனையை யழித்தன. சூரன் தனித்தவனாகி வேறுகதியின்றித் தனது தாயாகிய மாயையை நினைத்தான். அவள் மந்தரமலையைக் கொண்டுவந்தால் இறந்தவர் யாவரும் எழும்புவ ரென்றாள். அதைக்கேட்டு அவன் தனது மந்திரத்தேராகிய இந்திரஞாலத்தைவிட்டு அம்மலையைப் பெற்றான். அதனின்றும் வந்த காற்றுப்பட்ட அளவிலே இறந்தவர் யாவரு மெழுந்தனர். முருகப்பெருமான் சிவப்படையைவிட்டு யாவரையுங் கொன்றார். அப்போது சூரன் இந்திரஞாலத்தேரை யழைத்துக் குமாரக்கடவு

ளுடைய சேனையர்வையுங் கொண்டு செல்லும்படி கட்டளையிட்டான். அது அப்படியே செய்தது. குமாரக்கடவுள் ஒரு பாரைத்தைவிட்டுத் தேரையுந் தம் சேனையையும் வருவித்துத் தேரைத் தம்மருகில் நிறுத்தியருளினார். சூரன் சக்கரப்புள்ளாகிச் சிறையினாற் பூதர்களை அடித்து வருத்தினன். குமாரக்கடவுள் பட்சியாய் வருவோனைத் தேரில்நின்று பொருதல் தகாதெனக் கருதி இந்திரனை மயிலாக்கி அதிலேறி ஒரு வாள் கொண்டு அப்பட்சிவடிவத்தை வெட்டியருளினார். பின்னர், சூரன் நிலம் நீர் தீ காற்றாகியும் வேறுவடிவங்களாகியும் மாறி மாறி நின்றான். ஒவ்வொரு வடிவத்தையுங் குமாரக்கடவுள் அழித்தருளினார். அப்போது அவன் தனியனாக நிற்கக் குமாரக்கடவுள் சுவவடிவங்கொண்டு அவனுக்குச் சற்றே நல்லறிவு கொடுத்தருளினார்.

இறுதியு முதலு மில்லா விப்பெரு வடிவந் தன்னைக்
கறைவிட முறமுஞ் சூரன் கண்டுவிம் மிதத்தி னிற்ப
வறிவரு முணர்த றேற்றா வாறுமா முகத்து வள்ளல்
சிறிதுநல் லுணர்ச்சி நல்க வினையன செப்ப லுற்றான்.

(சூரபன்மன்வதைப்படலம்—சஙூ0)

அப்போது சூரன் அத்திருவடிவத்தைக் கண்டு பெருங் களிப்பெய்திப் பின்வருமாறு நினைத்தான்:— "பிரம விட்டுணுக்களுக் கெட்டாத பரம்பொருளே இக்குமாரக்கடவுளாம். இவ் வடிவத்தை எத்தனைமுறை பார்க்கினும் தெவிட்டுகின்றிலது. இதனைக் கோடி கற்பகாலம் பகுதி பகுதியாகப் பார்க்கினும் முழுவதையும் பார்த்தலியலாது. எனக்குக் கிடைத்த அண்டங்களெல்லாம் குமாரக்கடவுளது திருவடியிலுள்ள ஒரு ரோம நுனியிலே தங்கி நிற்கின்றன. இவர் என்னோடு

போர்புரியக் கருதியது திருவருட்பான்மையேயாம்.* எனது கோபந் தணிந்தது. போரிலூக்கங் குறைந்தது. கண்ணீர் பெருகுகின்றது. இவரில் அன்புண்டாகி உலை மெழுகைப்போல் மனமுருகுகின்றது. இவரை நான் வழிபடல்வேண்டும்.

சூழுதல் வேண்டுந் தாள்க டொழுதிடல் வேண்டுமங்கை, தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டுந் தாலு, வாழுதல் வேண்டுந் தீமை யகன்றுநா னிவற்கா ளாகி, வாழுதல் வேண்டு நெஞ்சந் தடுத்தது மான மொன்றே.

(சூரபன்மன்வதைப்படலம்—சசச.)

தேவர்களைச் சிறைசெய்தது தீதென்று பலர் உரைத்தனர். ஆயினும் அதனாலன்றோ பிரமா முதலிய தேவராலறியப்படாதவரும் வேதத்தினு லளக்கப்படாதவருமாகியபரம்பொருள் என்னையணுகினர். சிறைசெய்தது நன்மையேயாயது." இவ்வாறு சூரன் நினைத்து நிற்கக் குமாரக்கடவுள் அவனுடைய பழைய அறிவை வருவித்துத் தாமும் பழையவடிவங் கொண்டருளினர். அப்போது சூரனுக்குப் போரில் விருப்பமுண்டாகிக் கோபமுந் தோன்றியது. அப்போருக்குக் காரணராயிருந்த தேவர்களைக் கொல்லவேண்டுமென்று துணிந்து மாயமந்திரத்தை யுச்சரித்து ஓரிருள்வடிவத்தை யெடுத்தான். தேவர்கள் கலக்கமுற்று முருகப்பெருமானை வணங்கினர்.

நண்ணினர்க் கினியா யோலஞான நாயகனே யோலம், பண்ணவர்க் கிறையே யோலம் பரஞ்சுடர் முதலே யோல, மெண்ணுதற் கரியா யோலம் யாவையும் படைத்

*"நண்ணினனமருக்கென்கை யருளென நாட்டலாமே." (சசக)

தா யோலங், கண்ணுதற் பெருமா னல்குங் கடவுளே
யோல மோலம்.

தேவர்க டேவே யோலஞ் சிறந்தசிற் பரனே யோலம்
மேவலர்க் கிடியே யோலம் வேற்படை விமலா வோலம்
பாவலர்க் கெளியா யோலம் பன்னிரு புயத்தா யோல
மூவரு மாகி நின்ற மூர்த்தியே யோல மோலம்.

(சூரபன்மன்வதைப்படலம்—சசுO, சசுக.)

அவ்வடிவ மழிக்கப்பட அவன் மாமரமாகி அசைந்து நின்றான். அந்த அசைவினால் உலகங்களெல்லாம் அதிர்ந்தன. குமாரக்கடவுள் வேலாயுதத்தை விடுத்து அம் மாவைக் கிழித்தருளினர். அவன் தன்னுடைய இயல்பான வடிவத்தோடு தோன்றி வாளை வீசிநின்றான். வேலாயுதம் அவ்வடிவத்தையும் பிளந்தது. அதன் ஒரு கூற்றில் இருந்த சூரன் மயிலாகவும், மற்றைய கூற்றிலிருந்த பதுமன் சேவலாகவுந் தோன்றிப் போருக்கு முயன்றனர். அப்போது குமாரக்கடவுள் அவர்களில் தமது திருவருட்பார்வையைச் சேர்த்தருள, அவர்கள் அன்பினராகி ஞானம்நிறைந்த சிந்தையராயி னர். அப்போது குமாரக்கடவுள் சேவலைக் கொடியாக வும் மயிலை வாகனமாகவுங் கொண்டு அவர்களுக்குப் பேரருள் சுரந்தனர். தீமைகளெல்லாஞ் செய்தவரே னுங் குமாரக்கடவுளது திருமுன்னிலையை யடைவராயிற் குற்றங்கள் நீங்கி மேலானபதவியை யடைவரென்பது ஆராய்ந்தறியவேண்டியதா? அப் பெருமானோடு கொடிய போர்செய்த சூரனுமன்றோ எல்லையில்லா அருளைப் பெற்றான்.

தீயவை புரிந்தா ரேனுங் குமரவே டிருமுன் னுற்றாற்
றூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை

யாயவும் வேண்டுங் கொல்லோ வடுசம ரிங்காட் செய்த
மாண்யயின் மகனு மன்றோ வரம்பிலா வருள்பெற் றுய்க்
[தான்.
(சூரபன்மன்வதைப்படலம்—கூசகூ.)

குமாரக்கடவுளுடைய கணங்களெல்லாம் அவரு டைய திருவடிகளைத் தொழுதுநின்றனர். தேவர்கள் எல்லையில்லாத மகிழ்ச்சியடைந்து ஆர்ப்பரித்துக் குமா ரக்கடவுளைத் துதித்தனர். சூரனுடைய மனைவி அவ னிறந்ததைக் கேட்டது மிறந்தாள். மற்றையோரு மிறந்தனர். இரணியன் கடலினின்றுமெழுந்து வந்து அழுது புலம்பித் துக்கத்தை யொருவாறு தீர்த்துத் தனது குருவாகிய சுக்கிரனிடஞ் சென்று தந்தையர்க் குந் தாயார்க்குந் துணைவர்க்கும் ஏனையர்க்கும் அபரக் கிரியைகளை விதிப்படி செய்தபின் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்தான்.

வீரவாகுதேவர் தேவர்களைச் சிறையினின்றும் நீக்கி, அவர்களைக் குமாரக்கடவுளது திருமுன்பிற் கொ ணர்ந்தார். அவர்களோடு குமாரக்கடவுள் திருச்செந் திக்குப்போய் அங்கே வதிந்தருளினர். பிரம விட்டு ணுக்கள் அவருக்குப் பூசைசெய்து தாம் அவரில் தலை யன்புடையராதல் வேண்டுமென்று வேண்டினர். குமா ரக்கடவுள் அப்படியே அருள்செய்து சிவபூசை செய்து கொண்டிருந்தார்.

குமாரக்கடவுளே சிவமாகிற் பூசைசெய்வ தெங் ஙன மெனின்:—உருவம், அருவுருவம், அருவமாகிய திருமேனிகளையுடைய மூர்த்திமான்கள் பரமசிவம் அல் லர். பரமசிவம் இம்மூர்த்திபேதங்களைக் கடந்தவர். குமாரக்கடவுள் மூர்த்திமான். ஆதலால் அவர் பரம

சிவத்தைப் பூசித்தல் முறையே. குமாரக்கடவுளே பூசைபண்ணினாராயின் எம்மனோர் பூசைசெய்தல் தமது தகுதிக்குப் போதாதென்னல் அவரது ஆணவத்தடிப்பின் பான்மையே என்பதையறிக.

---

# தேவகாண்டம்.

---

குமாரக்கடவுள் திருச்செந்தியிலிருந்து திருப்பெருங்குன்றத்துக் கெழுந்தருளினர். அவர் அங்கு வைகும் நாட்களில் தேவேந்திரன் தெய்வயானையம்மையாரை வதுவைசெய்யும்படி அவரை வேண்டினன். அம்மையார் நெடுநாட் செய்த தவத்தின்பயனாகத் தம்மைச் சாருதல் தகுமெனக் குமாரக்கடவுள் சொல்லியருளினர். இதைப் பெருமகிழ்ச்சியோடு கேட்ட இந்திரன் திருமணத்துக்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தான். தேவர்களும் முசுகுந்தன் முதலிய அரசர்களும் வேறு மனிதர்களும் திருமணந் தரிசிக்கப் போயினர். சிவபிரான் உமைபம்மையாரோ டெழுந்தருளி வந்து குமாரக்கடவுளுக்குக் கருணைகூர்ந்தனர். அவர்களது ஆஞ்ஞைப்படி தெய்வயானையாரை மணச்சாலைக் கழைத்தனர். அம்மையாருடைய மெல்லிய அடிகள் அம் முரஞ்ஞை கல்லில் மிதிக்க எங்ஙனம் வருந்துமென்று கால்களிலிருந்த சதங்கைகள் சொல்லி ஒலித்தன. அதை உளத்திற்கொண்ட புராணகாரர் கூறுகின்றனர்:—“முருகப்பிரானது திருவடிகள் கொடியேனது மனமாகிய கல்லில் உலாவுகின்றனவெனின் அம்மையாரது திருவடிகள் இக் கல்லில் மிதிப்பது புதுமையன்று.”

பஞ்சிதனின் மெல்லடி பணிப்பவரை யின்பாற்
குஞ்சரி நடந்தசெயல் கூறுபுது மைத்தோ
செஞ்சுடர்வை வேலுடைய செம்மலடி நீயே
னெஞ்சக வடுக்கலினு நின்றுலவு மென்றால்.
(தெய்வயானையம்மை திருமணப்படலம்—உ௩க.)

அம்மையாரை மணச்சாலையிற் குமாரக்கடவுளுக்குப் பக்கத்திலிருத்தினர். இந்திரன் குமாரப்பெருமானது திருவடிகளுக்குப் பூசைசெய்து அம்மையாரைத் திருக்கரத்திற் கொடுத்தான். அவரும் அம்மையாரும் உமாமகேசுரரை வணங்கினர். அவர்கள் ஆசீர்வதித்து மறைந்தருளினர். குமாரக்கடவுள் "புவனமன்னுயிர்த்தொகை யுய்ந்திட முயங்கி வைகின்றார்" என்று சொல்லப்பட்டிருத்தலால் அம்மையார் அவரது சத்தியேயென்பதும், இத் திருமணம் காவியச்சிறப்புக்காக ஏற்பட்டதென்றும் வெளிப்படை. எஞ்சியவையும் திருமணத்தினங்கமாகக் கற்பிக்கப்பட்டவை.

பின்பு குமாரக்கடவுள் தேவலோகத்துக்குச் சென்றருளி இந்திரனுக்கு முடிசூட்டுவித்துக் கைலாசத்துக்குப் போய்க் கந்தவெற்பை யடைந்து அங்கெழுந்தருளியிருந்தார்.

திருமணப்படலத்தில் ஆடவர்களும் ஆட்டிகளும் காதல்கொள்ளுந் திறத்தை நூறுபாடல்கள் கூறுகின்றன. இத் தெய்விகமான நூலில் இவ்வகைப் பாடல்கள் விரவுதல் தக்கதோ எனச் சிலர் நினைத்தல்கூடும். பெருநெருப்புக் கீரமில்லை என்றவாறு முருகப்பிரானது பேரருள் நிறைந்த இடத்தில் இக்கருத்துக்களைப் பாவிவிடுவதால் அக் காதல்கள் தோன்றினும் அவை யழியும். தாய்தந்தையரது முன்னிலையில் ஒரு குழந்தை விளக்

கிலே கவர்ச்சிகொண்டு அதனிடம்போய் அதைத் தீண்டினும் அதனாற் பொல்லாங்கு வராமல் அவர்கள் *காப்பர். அக் குழந்தை அதை ஒருமுறை தொட்டு அதன் தீமையை உணருமாயின் அதன்பின் அதிலே அக் குழந்தைக்கு மனஞ்செல்லாது. இவ்வாறு இப்பாடல்களால் தீமைதோன்றினும் அத்தீமை அழிக்கப்பட்டு பின் தோன்றமாட்டாமலும் போகும். ஒரு வித்தை முளைப்பித்து அம் முளையை அழித்துவிட்டால் அவ்வித்து ஒருகாலும் மரமாகி நிலையாது. இவ்வுபாயத்திற் கச்சியப்பர் கைவந்தவர்.

இந்திரன் இதன்முன் பட்ட துன்பங்களை நினைந்து தேவலோக வாழ்க்கையை விடுத்துத் தவஞ்செய்யக் கருதினன். அவனுடைய குருவாகிய வியாழன் அவன் உலகஇன்பத்துக்கே உரியவனென்பதையுந் தவஞ்செய்யத் தக்கவனல்லனென்பதையுங் கண்டு உலகாயதத்தை உபதேசித்தான். உபதேசங்கள் அவரவர் பக்குவங்களுக்கேற்பவே செய்யப்படல்வேண்டும். உண்மைகள் உணவுப்பொருள்கள்போலத் தகுதிபற்றி யுள்ளவை யன்றி யாவர்க்கு மொரேபெற்றியானவையன்று. காட்டுமனிதனுக்கு வானசாத்திர ரகசியங்கள் உண்மைகளாகா. கடுநோயுற்றோர்க்கு வைர உணவுகள் உணவாகா. அவ்வாறு, இந்திரன் உலகஇன்பங்களைத் துய்க்கவேண்டிய பக்குவமுடையோனா யிருந்ததால் உலகாயதமே அவனுக்கு உண்மையாகும், ஆகம ஞானம் உண்மையாகாது.*

---

*இம்முறைபற்றியே அரிச்சுனன் தவத்துக்குரியனல்லனாதலாற் போர்செய்தலாகிய வர்ணதர்மமே தக்கதெனக் கிருஷ்ணபகவான் அவனுக்குப் போதித்தனர்.

வியாழபகவான் சொல்லியதாவது:-"நீ இன்பத்தை வெறுத்துத் தவஞ்செய்து பெறுவதும் இன்பந்தானே. ஆதலால் இன்பத்தை வெறுக்காதே. விடய இன்பமே தக்க இன்பம். கானலை நீரெனக் கருதிக் கையிலிருக்கும் அமிர்தத்தை ஊற்றியவர்போல் ஐயப்பொருளாகிய வீட்டை நினைத்துக் கையிலுள்ள இன்பத்தை விடாதே." இதைக்கேட்ட இந்திரன் உள்ளிருந்த ஆசை வெளிப்படப் பெண்களின் தன்மையைக் கூறுமாறு கேட்டான். குரு காமநூலை உபதேசித்தனர். அவ்வுபதேசத்தால் அவன் சிற்றின்ப நுகர்ச்சியில் நாட்டமுடையவனாகிச் சயந்தனுக்குப் பட்டஞ்சூட்டி வைத்துவிட்டு இந்திராணியோடிருந்து இன்பத்தை யனுபவித்தான். சயந்தன் குருவைநோக்கித் தாங்கள் சூரனால் வருந்தியதற்குக் காரணம் யாதென வினவினான். வியாழன் தக்கனுடைய யாகவரலாற்றைக் கூறுகின்றான்.

---

# தக்ஷகாண்டம்.

---

தக்கன் பிரமாவின் புதல்வன். அவன் ஒருநாள் பிரமதேவரிடஞ் சென்று தனக்கு வேதத்திற் றோன்றிய ஐயங்களைத் தீர்த்தற்காகச் சில வினாக்களை வினவினான். அவற்றிற்குப் பிரமா தக்கவிடை யிறுத்தனர். அவ்வினா விடைகள் பின்வருமாறு:—

தக்கன்:—உயிர்க்குயிராய் உயிர்க்குப் பதியாயுள்ளவர் யாவர்?

பிரமா:—விட்டுணுவும் நானும் போர்செய்தபோது எங்களுக்கிடையே எம்மாலடிமுடி தேடி யறியப்படாத சோதிவடிவாய் நின்ற சிவமே பதி.

தக்கன்:—படைத்தல் காத்தலைச் செய்யும் நீங்கள் பதியாகாது அழித்தலைச் செய்பவன் பதியாவது எவ்வாறு?

பிரமா:—எங்களை அழிப்பவரே பின்னர் எங்களைப் படைப்பவருமாவர். எங்களுக் காற்றலைத் தந்து எங்களில் மறைந்துநின்று எமது தொழிலைச் செய்விப்பவர் அவரே.

தக்கன்:—வேதமானது ஐம்பூதங்களையும் உயிர்களையும் பிரமென்பதேதனுல்?

பிரமா:—வேதங்கள் சிவத்தைப்பற்றிச் சொல்வதே உண்மை. மற்றவைகளைப்பற்றிச் சொல்வது உபசாரம். நதிகளெல்லாம் ஈற்றிலே கடலை யடைவது போல எப்பொருளுக்குச் செய்யப்பட்ட வழிபாடுஞ் சிவத்தையே யடையும். சிவபெருமான் ஒருவரே முத்தியைக் கொடுக்கத்தக்கவரென்று வேதங் கூறுதலாலும் இதனை யறிந்துகொள். அவரை யடைதற்கே நீ வழி தேடுவாயாக.

அதைக்கேட்டுத் தக்கன் பெருந்தவஞ் செய்தான். அதன் பயனுகச் சிவபெருமான் அவனுக்குத் தோன்றி யருளினர். அப்போது அவன் அவருடைய திருவடியைப் பெறும் வரத்தை வேண்டானுகி வேறு பெரும் வரங்களையும் உமாதேவியார் தனது மகளாதலையுங் கேட்டு அவற்றைப்பெற்முன். அவ்வரங்களின் பெருமையைக் கண்டு தேவர்கள் அசுரர்கள் முதலிய யாவரும் அவனுக்கடங்கிக் கீழ்ப்பட்டிருந்தனர். பிரமவிஷ்ணுக்கள் அவனுடைய பிதா பிதாமகனுயினும் அவனுக்கஞ்சியே வாழ்ந்தனர். அவன் வேதவல்லி யென்பாளை மணஞ்செய்து அநேக பிள்ளைகளைப் பெற்முன். அப் பிள்ளைகள் மேலான அதிகாரங்களைப் பெற விரும்

பித் தவஞ்செய்யப் போயினர். அவர்களுடைய கருத்தை நாரதமுனிவ ரறிந்து அவர்களை நல்வழிப்படுத்தற்காக அங்கு சென்றனர். அங்கே அவர்களைக் கண்டு "நீவிர் இவ்வருந்தவம் புரிந்து அதிகாரம் முதலியவற்றால் வருஞ் சிற்றின்பங்களைப் பெறக் கருதுகின்றீர்கள். இவ்வதிகாரங்கள் நிலையற்றவை. பிறப்பிறப்புக்குக் காரணமானவை. துன்பத்திற் கேதுவானவை. பொன் விலங்கைப்போன்றவை. பொன்னின் பெருமையை நினைத்துப் பொன்விலங்கை யாரயினுங் காலிலிடுவரா? மேற்கூறிய அதிகாரம் முதலிய பெருமைகளாலே சிவபிரானை மறக்கவும் நேரும். சிவபிரானை மறத்தலினுங் கொடியது முண்டோ? இவ்வதிகாரப் பேற்றைக் கருதாது மோட்சத்தைப் பெற முயலுங்கள்" என்றார். அவர்கள் அதைக்கேட்டு அதுவே தக்கதென நினைந்து முனிவரை வணங்கித் துதித்தனர். அவர் அவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்து அவர்களை ஆசீர்வதித்துப் போயினர். அவர்கள் தவஞ்செய்து வீட்டின்பத்தைப் பெற்றனர். இதைத் தக்கன் கண்டு வருந்திப் பெண் மக்களைப் பெறுதலே நலமெனக்கண்டு அப்படியே பெண்மக்களைப் பெற்று முனிவர்களுக்கு மணஞ்செய்து கொடுத்து வேறு இருபத்தேழுபெண்களைப் பெற்றுச் சந்திரனுக்குக் கொடுத்தான். சந்திரன் ரோகிணியில் மிக்க காதலுடையவனா யிருந்ததால், அவன் கலைகள் குறைக என்று தக்கன் சாபமிட்டான். சந்திரன் கலை குறைந்ததால் வருந்திச் சிவபிரானைச் சரணடைந்து தன்னைக் காக்குமாறு வேண்டினன். அவர் அவனைத் தமது திருச்சடையிலே தரித்துக் காத்தனர்.*

---

* சந்திரன் இருபத்தேழு நட்சத்திரங்களுக்கும் நேரே செல்லுதலும் அவற்றுள் ரோகிணிக் கணிமையாகச் செல்லுத

பின்னர் தக்கனுடைய வேண்டுகோளின்படி உமா தேவியார் அவனிடமிருந்து வளரவேண்டியதாயது. அதற்காக உமாதேவியார் திருக்கயிலாயத்திலிருந்து நீங்கினர். அவ்வாறு அவர் நீங்கிய சரித்திரத்தைக் கூறுவது உமை கயிலைநீங்குபடலம். இதிலே சிவபிரானது சொரூப தடத்த லட்சணங்கள் விரிவாகச் சொல்லப்படுகின்றன. வடிவங்கள் யாவும் அருளுருவங்களென்பது வற்புறுத்தப்பட்டது. உமாதேவியார் தாம் சிவபிரானது திருவருள் என்று தம்மை வியந்த குற்றத்தைப் போக்குதற்காகத் தவஞ் செய்யுமாறு சிவபிரான் அவருக்குக் கட்டளையிட்டருளினர்.† அங்ஙனமே உமாதேவியார் காளிந்திநதியிலே ஒரு தாமரைப்பூவிலே ஒரு சங்காக அமர்ந்தருளினர். அங்கு தீர்த்தமாடச் சென்ற தக்கன் அதைக் கண்டெடுக்க அது குழந்தை வடிவுகொண்டது. அவன் அது உமாதேவியாரெனக் கண்டு பெருமகிழ்ச்சியோடு கொண்டுபோய் வேதவல்லியிடங் கொடுத்தான். உமாதேவியார் அங்கிருந்து வளர்ந்து ஆறும் வயதிற் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்யத் தொடங்கினர். ஒருநாள் சிவபிரான் அவரை விவாகமுறையாக ஏற்று மறைந்தருளினர்.

இவ்வாறு மறைந்து சென்றருளியதால் தக்கன் அதை விசாரித்தறிதற்காகக் கைலாசத்துக்குப் போனான். அவனுடைய கருத்தை யறிந்து வாயிலில் நின்ற பூதங்கள் அவனைத் தடுத்தன. அப்போது அவன் அவர்களைப் பார்த்து,

---

லும் இவ்வாறு கதையாயினபோலும். சிவஞானத்தைச் சிவபிரானது திருச்சடையிலுள்ள சந்திரகலையாகச் சொல்வதுண்டு. இவ்வுண்மையை யொட்டி இக்கதை தோன்றியதென்க.

† தற்பெருமையின் பொல்லாங்கை விளக்குதற் கெழுந்ததிக்கதை.

"தோற்றும லின்ன வகைசூழ்ந்த நுந்தேவை யாரும்
போற்றாமல் வந்து பணியாமற் புகழ்ந்து மேன்மை
சாற்றாமலெள்ளல் புரிபான்மை சமைப்ப னென்று
மேற்று னிழைத்த வினையுய்த்திட மீண்டு போனான்"
(தக்கன் கயிலைசெல்படலம்—கக.)

அங்கு அவன் பிரமா முதலிய தேவர்களை நோக்கித் தன க்கு நேர்ந்த குறைகளைச்சொல்லி, "நீங்கள் இன்று தொ டங்கிச் சிவனை வழிபடுதலை விடுமின். அவனை வணங்கு வீராயின் உங்களுடைய வாழ்வைக் கெடுப்பேன்" என்றான். (உஉ)

நன்றுநன் றென்னை யெண்ணு நக்கனை யுமையை நீவி, ரின்றுமுன் னாக வென்று மிறைஞ்சியே பரவு கில்லீ, ரன்றியு மதித்தீ ரல்லீ ரப்பணி மறுத்தீ ராயின், மன்றநும் முரிமை யின்னே மாற்றுவன் வல்லை யென் றான்.

அவர்க ளதற்கிசைந்து அப்படியே செய்வோ மென்று சொல்லித் தம்மிடங்களுக்குச் சென்றனர். ஆயினும், பிரமா இவனுக் கஞ்சாது சிவபிரானையே யாகாதிபதியாகக் கொண்டு ஒரு யாகத்தைச் செய்தார். தக்கன் சிவபிரானுக்கு முதன்மை கொடுக்கலாகா தென் றும், விட்டுணுவையே பரமபதியாகக் கொள்ளல்வேண் டுமென்றுங் கட்டளையிட்டான். அதைக்கேட்ட நந்தி தேவர் அச் சிவநிந்தையைச் சகிக்கமாட்டாதவராய் அந்த யாகங் குலைக வென்றும் தக்கனது செல்வ மழி ந்து அவனுக்குப் பிறிதோர்தலை யுண்டாகுக என் றும் சாபமிட்டுக் கயிலைக்கு மீண்டனர். இச் சாபத் திற்குந் தக்கனுடைய கொடுமைக்கும் அஞ்சித் தேவர் முதலியோருள் ஒருவரும் நெடுங்காலம் யாகஞ் செய்தா

ரல்லர். இதையறிந்த தக்கன் விஷ்ணுவை யாகாதி பதியாக்குந் தன்னுடைய ஏற்பாட்டை நிறைவேற்று தற்காகத் தானே ஓர் யாகஞ்செய்யத் தொடங்கினான். அப்போது ததீசிமுனிவர் அங்கே சென்றார். அவருக்குத் தக்கன் தன்னுடைய நோக்கத்தைக் கூறினான். அதைக்கேட்ட ததீசிமுனிவர் பிரமவிட்டுணுக்களுக்குச் செல்வத்தைக் கொடுத்தவரும் தேவாதிதேவரும் மூவர்க்கு முதல்வரும் சிவனேயாக அவரை விடுத்து வேறொருவரைத் தேடல், "பெற்ற தந்தையை விலக்கி வேறு தேடுவான் றன்மையன்றே" என்று சொல்லிச் சிவபிரானே பரம்பொருளென்பதை விளக்கி "நீ சிவபிரானது பெருமையை உன்தந்தைபாற் கேட்டு அவரை நோக்கித் தவஞ்செய்தே இப்பெருமையெல்லாம் பெற்றாய் உனக்கு அழிவுகாலம் வந்தமையால் இவற்றையெல்லாம் மறந்தாய். உன் தந்தை முதலியோரும் முடிவு காலம் வந்ததால் உன்னைச் சார்ந்தனர். நீ உய்ய வேண்டுமாயின் சிவனையே பதியாகக் கொள்" என்று கூறினர்.

தந்தை யேமுதல் யாவரு முடிவுறுந் தகவால்
வந்து நின்னவை யிருந்தனர் மாயையான் மருண்டா
யுய்ந்தி டும்படி நினைத்தியே லாற்கவி யுதவி
யிந்த மாமகம் புரிந்திடு வாயென விசைத்தான்.

(ததீசிப்படலம்.—கூ௫)

அப்போது தக்கன் பின்வருங் கேள்விகளைக் கேட்டான். அதற்கு முனிவர் விடையளித்தனர்.

தக்கன்:—கடவுள் தலையெலும்புகளையும் சாம்பரையும் சடையையும் அணிவாரா? உயிர்களை யழிப்பாரா?

ததீசி:—உயிர்கள் வினைகளை யனுபவித்து மலத்தினின்று நீங்குவதற்காக அவைகளுக்குக் கடவுள் உடலைக் கொடுத்தருளுவர். மலபந்தம் நீங்கியபின் அவ்வுடல்கள் அவைகளுக்கு வேண்டாமையின் அவைகள் அழிக்கப்படும். மற்றையவை இளைப்பாறுதற்காக அவற்றின் உடல்களை அவர் அழிப்பர். இங்ஙனமே பிரமவிட்டுணுக்களையும் அழிப்பர். ஆதலால் அழித்தல் அருட்செயலேயென அறிவாயாக. பிரமவிட்டுணுக்களுடைய தலைகளையணிதல் அவரே பரம்பொருளென்று உயிர்களறிந்து அவரைநாடி முத்திபெறுவிக்குந் திருவருளாம். உலகங்க ளழியும்போது அருவமாக நிற்கும் மாயை சாம்பரெனப்படும். அம்மாயையைத் தாங்குபவர் அவர் என்பதைச் சாம்பரணிதல் காட்டும். தலையிலணியுஞ் சடை, மார்பிலணியும் பூணூலைப்போல, ஞானத்தைக் குறிப்பதாம். விட்டுணு பன்றியாகியும் ஆமையாகியும் அகந்தைகொண்டபோது கொம்பையும் ஓட்டையும் பிடுங்கி அவற்றை அணிந்தனர். இது அவர் ஆணவத்தை நீக்குபவர் என்பதைக் காட்டும்.

தக்கன்:—கடவுளாகிய பரம்பொருள் புலித்தோல் அணிவாரா? நெருப்பு, மான், மழு ஆகிய இவற்றைத் தாங்குவாரா? பலியேற்பாரா? பூதங்களைச் சேனையாகக் கொள்வாரா? பாம்பையணிவாரா?

ததீசி:—இவைகள் யாவும் தாருகவனத்து முனிவர்களை நல்வழிப்படுத்திய திருவருட்செயலில் நேர்ந்தவைகளாம். தாருகவனத்திலே ஒரு காலத்தில் இருந்த முனிவர்கள் பூர்வமீமாஞ்சை கற்றுக் கர்ம்மமே பலனைத்தரு மென்றெண்ணிக் கடவுளை மறந்து அவருடைய திருவருளை நுகராமல் உலைந்தனர்.

முன்புதா ருக வனத்தின் முனிவரர் யாரு மீசற்
கன்பில ராகி வேள்வி யளப்பில புரிந்து தாமே
யின்புறுமுத்தி தன்னை யெய்துவா னுன்னியங்கந் [ரூர்
துன்புற வாளா நோற்றுத் துணிவினு லொழுக லுற்
(ததீசியுத்தரப்படலம் - ௬0)

பூர்வமீமாஞ்சை ஆன்மாவைப்பற்றியுங் கடவுளைப் பற்றியும் அறியமாட்டாதார்க்குரிய நூல். அது பொதுவான பசு நல்வினைகளையும் யாகம் முதலிய கருமங்களையும் மேலானபொருள் எனச்சொல்லும். அதற்கு மேற்பட்டதாகிய உத்தரமீமாம்சை கர்மத்தோடு ஆன்மாவைப்பற்றியுஞ் சொல்லும். அது கடவுளும் ஆன்மாவுமொன்றெனக் கருதலாற் கடவுளுடைய சொரூபலட்சணத்தையேனும் சிவபுண்ணியங்களையேனுங் கூறாது. இது மாயாவாதமெனப்படும். சித்தாந்தமீமாம்சையே ஆன்மாவுக்கு ஆன்மாவாகிய பதியின் லட்சணத்தையுங் கூறிச் சிவபுண்ணிய வாயிலாக ஞானத்தை நல்கிப் பரமுத்தியைக் கொடுக்கத்தக்கது. பூர்வமீமாம்சையின் மேலாக உத்தரமீமாம்சையும் அதன் மேலாகச் சித்தாந்தமீமாம்சையும் நிலவுதல் அவதானிக்கத்தக்கது. இம்முனிவர்கள் பூர்வமீமாம்சையில் நின்று முதிர்ந்த பக்குவர்களானதால் அவர்களை மேல்நிலைக் குயர்த்தற்குச் சிவபிரானது திருவருள்சுரந்தது. இவர்கள் யாகஞ்செய்தலால் எக்குறைகளும் தீருமென்றும், எவ்வகைச் சம்பத்தையும் பெறலாமென்றும், நினைந்து யாகங்களைச் செய்து அவற்றாற் சிறப்புற்றுத் தாம் குறைவிலா ரெனக் கருதி மயங்கினர். அவர்கள் அத்துணைச் சீரியரல்லர் நனிமெலியராகிய அஞ்ஞானிகள் என்னுமிவ் வாய்மைகளை அவர்களுக்குக் காட்டல் அவசியமாயது. அஞ்ஞானத்தின் அறிகுறி ஆசை. ஆசைக

ளுள் வலியது சிற்றின்ப ஆசை. இந்த ஆசையானது ஆன்மா எடுத்த ஒவ்வொரு பிறவியிலும் முனைத்து நின்று வைரித்து அதன் ஸ்வபாவ மெனத்தக்கதாகப் பெலத்திருத்தலாலும், இந்த ஆசையே யொருவருடைய ஆற்றற் குறைவை இலகுவிற் காட்டத்தக்கதாதலாலும் சிவபிரானது திருவருளானது அம்முனிவரிலிருந்த இவ்வாசையை வெளியாக்கி அவர்களின் உண்மையான துர்ப்பலநிலையைக் காட்டியது. எவ்வாறெனில்: சிவபிரானது திருவருளானது ஓர் அழகிய ஆண் வடிவாகவும் விஷ்ணுமூர்த்தியின் திருவருள் ஓர் அழகிய பெண்வடிவாகவும் தாருகவனத்திற்குச் சென்றன. பெண்வடிவத்தைக் கண்ட முனிவர்கள் யாவரும் அதில் ஆசைகொண்டு தங்கள் பெருமையை இழந்து அதற்கடிமைப்பட்டார்போல் அதன்பின்னே சென்றனர். அப்போது அவர்கள் தங்களுடைய சிறுமையை உணர்ந்தனர்.

விடுத்தலு முராரி யேகி வேள்வியுந் தவமுந் தாமே, கொடுத்திடு முத்தி யென்னுங் கொள்கைசேர் முனிவர் யாரு, மடுத்திடு மவைக்க ணெய்தி யளவையிலநங்கர் வல்லே, தொடுத்திடு சரங்க ளேபோற் றுணை விழி பரப்பி நின்றான். (ருக)

பார்கொலோர் விசும்பு கொல்லோ பங்கயன் பதியோ காம, னூர்கொலோ முகுந்தன் வைகு முலகமோ வுறையு ளன்றே, னீர்கொலோ வமரர்க் காக நிருதரைத் தொலைத்தீ ரும்மை, யார்கொலோ வுணரு கிற்பா ரடியருக் கருளு மென்றார். (சஉ)

அம்முனிவர்களது மனைவியர் ஆண்வடிவத்தைக் கண்டு அதற்கு வசப்பட்டுத் தங்களினும் வலிய பொரு

ளொன் றுண்டென்பதை உணர்ந்தனர். முனிவர்கள் தமது பெண்கள் இவ்வாறு நிலைகெட்ட தன்மையைக் கண்டு இது சிவபிரானது செயலே யென்றெண்ணி அவரை வழிபட்டு நல்வழிப்படும் வழியை நாடாது ஆணவத்தடிப்பாற் கோபங்கொண்டு அவரைக் கொல்ல வேண்டுமென்று தீர்த்து அதற்காக ஒரு யாகஞ்செய்த னர்.

தாவொரு வேடங் கொண்டுத் தண்டுளா வலங்கற் சென்னி, வானவன் றன்னை விட்டு மற்றிவை யனைத் துஞ் செய்தோன், கானுறு கடுக்கை வேய்ந்த கண்ணுத லேகொ லென்றே, மானவெங் கனலுஞ் சீற்ற வன்னியுங் கிளர நின்றார். (சுரு)

அந்த யாகத்திலே தோன்றிய புலியை உரித்து அதன் தோலைச் சிவபிரான் அணிந்தருளினர். அதிலிருந்து புறப்பட்ட மானையும் மழுவையும் உடுக்கையையும் நெருப்பையுங் கையிலும், பாம்புகளை மார்பிலும் அணிந்தருளினர். அதிலே தோன்றிய பூதங்களைத் தொண்டராகவும், முயலகனைத் திருவடிமிதியாகவுங் கொண்டருளினர். முனிவர்களுடைய செயலெல்லாம் இப்படி வீணாக, அவர்களுடைய ஆணவங் கெட்டுச் சிவபிரானே மெய்ப்பொருளென்றும் அவருடைய திருவருளின்றி ஈடேறுதல் ஏலாதென்றுங் கண்டு, அவரை வழிபட்டுத் தவஞ்செய்து நல்வழிப்பட்டனர்.

பொறுத்தியெம் பிழையை யென்றே போற்றி செய் முனிவர் தங்க, டிறத்தினை நோக்கி நந்தஞ் செந்நெறி யொழுகித் தீய, மறத்தினை யகற்றி மேலை மாதவம் புரிதி ரென்று, திறுத்தின னடையா தார்க்கு நீடருள் புரியு நித்தன். (கஉரு)

தக்கன்:—கடவுள் யானைத்தோலை யணிவாரா? பிச்சை கொள்வாரா? நக்கனாய்த் திரிவாரா? சுடலை யாடுவாரா?

ததீசி:—சிவபிரான் யானைத்தோலைப் போர்த்த தெப்படியெனில்:—

கயமுகன் என்னுமோர் அசுரன் மனிதர் தேவர் முதலிய யாவரையும் அல்லற்படுத்தினான். அவனுக்கஞ்சிச் சிலமுனிவர்கள் காசியிலே மணிகர்ணிகையாகிய கோயிலிலே புகுந்து நின்றனர். அவன் அங்குச்சென்று அவர்களை வருத்தினான். அப்போது சிவபெருமான் அவனைக் கொன்றார். அவரது திருவடிவத்தின் ஒளியைத் தேவர் முதலியோர் தாங்கமாட்டாமலிருந்ததால் அவனுடைய தோலையுரித்துப் போர்த்தருளினர். நக்கனாவதும் பிச்சையேற்றதும் வயிரவமூர்த்தியாம். பிரமாமுதலிய தேவர்கள் அகந்தைகொண்டு தீயவர்களானபோது அவர்களிலே சிவபிரான் திருவருட்கூர வயிரவமூர்த்தம் தோன்றியது.

**எகினமது பார்த்த வண்ண லிரும்பவந் தொலைப்ப வேணைப், பகவர்த மகந்தை மாற்றப் பண்ணவர் மதர்ப்புச் சிந்த, மிகுபெருங் கருணை தன்னால் வேதநா யகனுள் ளத்து, மகிழ்வொடு புரிந்தா னென்ப வயிரவக் கடவு டன்னை.** (கசுச)

வயிரவமூர்த்தி நக்கனாகச்சென்று பிரமாவுடைய ஒருதலையைக் கிள்ளி மற்றைய தேவர்களிடம் இரத்தத்தை ஐயமாக வேற்றனர். அவ்விரத்தக்குறைவால் அவர்கள் அகந்தைநீங்கி நல்வழிப்பட்டனர். தலை கிள்ளியபோது பிரமா நல்லறிவெய்தி வைரவக்கடவுளைத் துதித்தனர்.

"இன்மை யாக விமைப்பி னுலகடும்
வன்மை கொண்ட வடுகநின் ஞாரு
ணன்மை யாற்றொல்லை நல்லுணர் வெய்தினன்
புன்மை யாவும் பொறுத்திடல் வேண்டுமால்" (களரு)

உலகங்கள் அழியவேண்டிய காலத்தில் வைரவ மூர்த்தியே யாவையுஞ் சங்கரித்து வேதங்களாகிய நாய்வாகனத்தில் உலவுவர்.

சுடலை யென்றது உலகத்தின் சுடலை. அஃதாவது உலகங்களெல்லாம் அழிந்தநிலை.

பொறியுறு முயிர்களும் புவனம் யாவையு
மிறுதியா யழிவுறு மீமத் தெல்லையின்
மறையெனு ஞாளியை யுயர்த்து மற்றவ
னுறுவதோர் மகிழ்ச்சியா லுலவு மென்பவே. (ககூரு)

தக்கன்:—கடவுள் மாட்டிலேறுவாரா?

ததீசி:—தர்மமாகிய தெய்வமே சிவபிரானது வாகனமாம். சிவபிரானது வடிவங்களெல்லாம் அவரது திருவருளாகிய சத்தியே. அவருடைய திருவருள் வடிவாகிய விநாயகரது தோற்றத்தைச் சொல்லுவேன் கேள். ஒருபொழுது சிவபிரான் உமாதேவியாரை நோக்கி "நாம் மிகுந்த சிரத்தையோடு உண்டாக்குகின்ற சோலைக்காட்டைப் பார்ப்போம் வருக*" என்று கூற உமாதேவியார் அதற்கிசைந்து இருவரும் அங்கு சென்றனர். அந்தச் சோலையானது சிவபிரானைப்போலவே எல்லையில்லாததாய் விளங்கிற்று. அதன்

---

*இதன் விளக்கம்:—சிவபெருமான் சிரத்தையோ டுண்டாக்குஞ் சோலையும் அவர் காணத்தக்க யானையு மெவையென்பதை ஆராய்தல் வேண்டும். அவர் உண்டாக்குஞ் சோலை முப்பத்

நடுவில் ஓர் சித்திரமண்டப மிருந்தது. ஆங்கு இருவரும் சென்றருளினர். சிவபிரானது சங்கற்பத்தினால் அச்சித்திரங்களு ளொன்றாகிய பிரணவமானது இரு கூறாகி இரண்டு யானைகளாகத் தோன்றி நின்றது.

பரங்கரில் வருவதோர் பரம னாணையா
லாங்கத னடுவணி லாதி யாகியே
யோங்கிய தனியெழுத் தொன்றி ரண்டதாய்த்
தூங்குகைம் மலைகளிற் றோன்றிற் றென்பவே.

(கயமுகனுற்பத்திப்படலம்—கசஉ)

அவற்றை உமாதேவியார் அருட்பார்வை செய்தருள அவைகள் புணர்ந்தன. அப்பொழுது விநாயகக்கடவுள் தோன்றினர்.

மருளறப் புகலுநான் மறைகளிற் றிகழுமெய்ப்
பொருளெனப் படுமவன் புவனமுற் றவர்கடம்
மிருளறுத் தவர்மனத் திடர்தவிர்த் தருளவோ
ரருளுருத் தனையெடுத் தவதரித் துளனவன். (கரு0)

இனிச் சிவபிரானது குணத்தைப்பற்றிக் கூறுவேன். அவர் மூவகைக் குணங்களையுங் கடந்தவராதலால் நிர்க்குணராம்.

---

தாறு தத்துவங்களும் அவற்றைச்சார்ந்த புவனாதிகளுமே. அதன் நடுவில் விளங்குஞ் சிறந்தமண்டபம் சுத்தமாயையாதல் வேண்டும். சுத்தமாயையில் ஞானமாயுங் கிரியையாயுமுள்ள நாதவிந்துக்களே அவ்விரு யானைகள். ஞானக்கிரியைகளின் கூட்டத்தால் உருவத் திருமேனிகள் தோன்றும். அவற்றுள் முதன்மையுடையது விநாயகமூர்த்தமென்க. சுப்பிரபேத ஆகமத்துட் கூறப்பட்ட இவ்வுண்மை விளக்கமாக இப்புராணத்திற் கூறப்பட்டது.

நற்குண முண்டையநல் லோரு நாடொணுச்
சிற்குண ஞகுறச் சிவன்ப ராபரன்
சொற்குண மூவகைத் தொடர்பு மில்லதோர்
நிர்க்குண னவன்செய னிகழ்த்தற் பாலதோ.

(அநந்தன் சாபநீங்குபடலம்—கஎ)

உருத்திரன் அழித்தலாகிய தொழிலைச் செய்தல் பற்றித் தாமதகுணத்தன் என்பர். உருத்திரன் மூம்மூர்த்திகளு ளொருவரன்றிச் சிவபிரானல்லர். ஆதலால் தாமதம் சிவபிரானது குணமன்று. சிவபிரானுக்கு இவற்றின்வேருய எண்குணங் கூறுவர். இவைகளும் அவரை அளவா.

இவ்வாறு தக்கனது விஞக்களுக்கு விடையாகத் ததீசிமுனிவர் சொல்லிய அரிய உண்மைகளைக் கேட்டும் அவனது மயக்கந் தீர்ந்திலது. அவன் முனிவரைநோக்கி, "இங்கே நீர் யாதுசொல்லினும் அதுபயன்படாது. நீர் கூறுஞ் சிவபிரான் பரமபதியாயினும் அவனை யாகாதிபதியாக நான் கொள்ளேன். இனிப் பேசாதிரும். என் கருத்தையே நான் முடிப்பேன். நீர் போம்," என்முன். அப்பொழுது முனிவர், "சிவபிரானை விலக்கிச் செய்யும் இவ்வேள்வி யழிக. இங்குள்ள தேவர்களு மழிக. இங்குள்ள பிராமணர்கள் பதிதராகுக," என்று சொல்லி முனிவர்கூட்டத்தோடு புறப்பட்டனர்.

தக்கன் யாகத்தைத் தொடங்கிப் பிரமவிட்டுணுக்களுக்கு முதலுபசாரஞ்செய்து மற்றைய தேவர்கள் முனிவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்தான். அருட்கடலாகிய உமாதேவியார் தக்கனுடைய பிழையைப் பொறுக்குமாறும், யாகத்துக்குப்போக விடை தருமாறும் சிவபிரானை வேண்டினர். அதற்குச் சிவ

பிரான், "அவன் மயக்கமுற்று நிற்றலால் உன்னை அவன் மதியான். அங்குச் செல்லவேண்டிற் செல்க," என்றருளினர். உமாதேவியார் யாகசாலைக்குப் போதலும் தக்கன் அவரையும் சிவபிரானையு மிகழ்ந்தான். அவர் திருக்கைலாசத்திற்குத் திரும்பிவந்து சிவபிரானது திருவடிகளைவணங்கி அவ்வியாகந் தீயதாதலால் அது சிதைக்கப்படுக என்றனர்.

அப்போது சிவபிரானது நெற்றிக்கண்ணிலிருந்து வீரபத்திரக்கடவுளும் உமாதேவியாரிலிருந்து பத்திரகாளியுந் தோன்றினர்†. வீரபத்திரக்கடவுளைச் சிவபிரான் பார்த்தருளி, "வீதிப்படி யெமக்குக்கொடுக்கும் அவியைக் கேள். தக்கன் அதற்கிசையானாகில் நீ அவனிலே யருள்சுரந்து அவனையும் அவனைச் சேர்ந்தோரையும் யாகத்தையும் அழிப்பாயாக," என்று சொல்லியருளினர்.

**தருத லின்றெனி னனையவன் றலையினைத் தடிந்து**
**பரிவி லவன் பாலுறு வோரையும் படுத்துப்**
**புரியு மெச்சமுங் கலக்குதி யங்கது பொழுதின்**
**வருது மாயிடை யேகுதி யென்றனன் வள்ளல்.**

(வீரபத்திரப்படலம்—உக)

அவரிருவரும் சிவபிரானது திருவடிகளை வணங்கிப் புறப்பட்டு யாகசாலைக்குச் சென்றருளினர். அங்கு வீரபத்திரர் யாகத்தலைவராயிருந்த விட்டுணுவுக்கு

†பத்திரகாளி உமாதேவியாரது அருள்வடிவமாம். இம்மூர்த்தி உமாதேவியாரைப்போல் வழிபடத்தக்கது. ஆகமமுறைப்படி பூசைபெறவேண்டியது. இதன் பெருமையை உணராதார் மதுமாமிசத்தை வைத்துப் பூசைசெய்து எரிவாய் நிரயத்துக் காளாகின்றனர்.

அடித்து, பிரமாவுக்குக் குட்டி மற்றைய தேவர்களைப் பலவாறாகத் தண்டித்தனர். தக்கன் அதுகண்டு யாவரு மிறத்தற்குத் தானே காரணனாந் தன்மையை யுணர்ந்து துக்கித்தான். வீரபத்திரப் பெருமான் யாக த்தை யழித்தனர். விட்டுணு இவற்றையெல்லாம் பார்த்து மனமாற்றாமற் போர்செய்யக் கருதினார். அவ்வாறு போர்செய்து அதில் அவர் தோற்றனர். அப்போது சிவபிரான் அங்கெழுந்தருளிவந்து யாவரையுமெழுப்புமாறு வீரபத்திரக்கடவுளுக்கு விடையளித்தனர். அவ ரவ்வாறே யெழுப்புதலும் எழுந்த தேவர்கள் சிவபிரானைத் தோத்திரஞ்செய்து "நாம் உன்னை மறந்திருக்கவும் நீயேவந்து எம்மயக்கத்தைத் தீர்த்து வாழவைத்தாய். நாமிதற்குச் செய்பத்தக்க கைமாறுண்டோ?" என்று சாற்றினர்.

வேதத் திறங்கடந்த வேள்விப் பலியருந்தும்
பேதைச் சிறியேம் பெரும்பகலுந் தீவினையி
லேதப் படாமே யிமைப்பி லதுதொலைத்த
வாதிக் கெவன்கொ லளிக்கின்ற கைம்மாறே.

(யாகசங்காரப்படலம்—கஙிரு)

தக்கனது தலை யெரிந்துபோனமையால் அவனுக்கோர் ஆட்டுத்தலையே கிடைத்தது. அவனும் அத்தலையோடு சிவபிரானை வணங்கிநின்றான். பின்னர் அவர் மறைந்தருளினர். பிரமா அவனுக்கு நற்போதனைகள் செய்து சிவபிரானையடைதற்கு வேண்டியமுயற்சிகளைச் செய்யுமாறு கட்டளையிட்டார். அக்கட்டளையின்படி அவன் சிவபூசைசெய்து அதன் பலனாற் சிவகணநாதரானான்.

தேவர்களுக்குநேர்ந்த துன்பங்களுக்குக் காரணம் தக்கனுடைய சிவநிந்தையைக் கேட்டதும் நிந்தனையான

செயல்கட்குத் துணையாய்துமே யென்பதை அறிந்த சயந்தன் கவலைநீங்கித் தேவலோகத்தை யரசாண்டு வந்தான்.

## குறிப்பு.

### உமாதேவியார் புதல்வியாய்தன்மை.

உமாதேவியார் சிவபிரானது திருவருட் சத்தியாதலால் அவரைப் புதல்வியாகப் பெறுதலாவது அவ்வருட் சத்தியிற் "கற்றுவின் மனம்போலக் கசிந்து" அதனைப் போற்றும்பொருட்டுக் கொள்ளல் என்பது பொருத்தமுடைத்து. அவரைப்புதல்வியாக முதலிற் பெற்றவன் தக்கன். அப்புதல்வி ஆதிசத்தியாகிய அருட் சத்தியாதல் வேண்டும். புராணக் கதைமுறைப்படி தக்கனிடம் போதற்குக் காரணமாயிருந்தது அம்மையார் சார்ந்திருந்த அகந்தையாம். அன்றியும் அம்மையார் தக்கனைச் சார்ந்தபின்னர் அவனுடைய ஆணவம் முனைத்துநின்று கொடுந் தீவினைகளைச் செய்வித்தது. இங்ஙனம் ஆணவத்தை முதிர்வித்தல் ஆதிசத்தியின் முயற்சியென்று ஞானசாத்திரங்கள் கூறும். "ஊனநாடக மாடுவித்தவா†" என்றார் மாணிக்கவாசகப் பெருமான். அம்மையார் கயிலைக்குத் திரும்பியபின்னருந் தக்கனி

†வானநாடரு மறியொணாதநீ
மறையிலீறுமுன் றொடொணாதநீ
யேனைநாடருந் தெரியொணாதநீ
யென்னையின்னிதா யாண்டுகொண்டவா
வூனநாடக மாடுவித்தவா
வுருகிநானுனைப் பருகவைத்தவா
ஞானநாடக மாடுவித்தவா
நையவையகத் துடையவிச்சையே.

(திருச்சதகம்—கூ௫)

டம் போகக் கருதியதும் அவனுடைய மலம் அப்போது பரிபாகப்படாதிருந்ததும் இக்கொள்கையை வற்புறுத்தும்.

இரண்டாவதாக உமாதேவியார் புதல்வியாயது மலையரசனுக்கு. இது பராசத்திபோலும். ஆதிசத்தியின் செயற்குப் பின்னரே பராசத்தி ஆன்மாவை அடையும். உமாதேவியாரைப் பெற்றபோது மலையரசன் அதனை லகந்தைகொள்ளாது தன்னைப்பணிந்து அது தனக்குக் கிடைத்தற்கரிய பேறெனக்கொண்டு இறைபணியில் நின்றான். உமாதேவியாரை ஈசனுக்களிக்கும்போது அவரோடு தன்னையும் அடிமையாகக் கொடுக்கக் கருதினான்.* ஆன்மா சிவத்தை அடையும் முறையிலும் பராசத்தியே அதை அடிமையாக்குவது. இதனை உமாபதிசிவம் "வாசி யருளிபதை வாழ்விக்கும்" என்று காட்டியருளினர்.

## வள்ளியம்மை திருமணப்படலம்.

நூலாசிரியர் சூரனுடைய மதமாகிய "மிண்டிய மாயாவாதமென்னுஞ் சண்டமாருத"த்தி னியல்பைச் சுக்கிரனுபதேசந் தொடங்கிச் சூரசங்காரம் வரையும் நன்குகாட்டி அம்மதத்தின் வலியைக் கெடுத்தனர். தக்கன் அநுசரித்த பாஞ்சராத்திரத்தையும், தாருகவன முனிவர் அநுட்டித்த பூர்வமீமாம்சத்தையும், இந்திரனது உலகாயதத்தையும் இத்தட்சகாண்டத்தில் விளக்கி மறுத்தனர். சித்தாந்தசைவ நாற்பாதங்கள் சனகாதியர்க்குக் கைலாசபதியினுபதேசத்தில் ஒரு

*கன்னிகை யுமையா டன்னைக் கடிமண முறையி னல்கி
என்னையு மடிமை யாக ஈகுவன் (மணம்பேசுபடலம்—க0)

வாறு சுட்டிக்காட்டப்பட்டன. இவற்றுட் சிவபுண்ணியங்கள் தக்கன் சிவபூசையிலும் மார்க்கண்டேயர் சிவபூசையிலும், ஞானபாதம் காசிபனுபதேசத்திலுந் தோன்றும். இவையாவற்றையும் அநுபவமுறையாக விளக்குதற்கு எழுந்தது வள்ளிநாயகியார் திருமணப் படலம் போலும். இதன் உண்மை பெரியோர்க்கே புலப்படுவதாயினும் சிறியேற்குத் தோன்றுவதை அச்சத்தோடு கூறுகின்றேன்.

இப்படலம் படைத்தல் முதலிய ஐந்தொழிலையும் ஆன்மா முத்தியடையும் மார்க்கத்திலுள்ள படிமுறைகளையும் விளக்குகின்றது. இங்குக் கூறப்பட்ட வள்ளிநாயகியார் யாவரென்பதை அறியில் இவை புலப்படும். வள்ளிநாயகியாரென நாம் வணங்கும் தேவியார் குமாரக்கடவுளுடைய கிரியாசத்தியென்று இப்படலங் கூறுகின்றது.

கல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனோர் தருவதாகி, வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப், பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட்டன்ப, ரெல்லவர் தமக்கு முத்தி யிருங்கனி யுதவுமென்றும். (௨௬௭)

அங்ஙனமாயின், சிவபிரான் திருமணஞ்செய்த உமாதேவியாரும், குமாரக்கடவுள் திருமணஞ்செய்த தெய்வயானையாரும் அவர்களுடைய சத்தியாவதுபோல, இத்திருமணத்திற் கூறப்படும் வள்ளிநாயகியுங் குமாரக்கடவுளது சத்தியாதல்வேண்டு மெனில், இத்திருமணத்திற்கும் ஏனைய திருமணங்களுக்கும் பலவேற்றுமைகள் உண்மையால் அங்ஙனங்கொள்ளலாகாது.

(௧) அவ்விரு சத்திகளும் பெருநோன்பியற்றியே தமது நாயகர்களைப் பெற்றனரெனப் பாவிக்கப்பட்டது. வள்ளிநாயகியார் ஒருநோன்புமின்றி இருக்கக் குமாரக் கடவுளே அவரை வலிந்து பெற்றனர். அன்றியும் அவ்வம்மையார்களது திருமணத்தில் அவரை வளர்த்தோர் பேரவாவுடையராய்த் திருமணத்தைப் பெரும் பேருகக் கருதினர். வள்ளிநாயகியாரை வளர்த்த வேடர் திருமணத்துக்கு மாறுகநின்றனர். அம்மையார் குமாரக்கடவுளது சத்தியாயின், அவர்கள் ஐக்கியமாதற்கு வேடர்கள் தடைசெய்த பாவனை பொருந்தாது.

(௨) குமாரக்கடவுள் வள்ளிநாயகியாரிற்கொண்ட காதல் வேறுபொருளுடைத்தென்று இப்படலத்திற்றானே கூறப்பட்டது. ஆகாயத்தில் அசையாது நிற்குஞ் சந்திரனது நிழல் அசைகின்ற நீரில் விழும்போது சந்திரனசைவதாகக் காட்டும். இவ்வசைவையே குமாரக்கடவுளது காதல் நிகர்க்கும் என்பது கீழேகாண்க.

உலைப்படு மெழுக தென்ன வுருகியே யொருத்தி காதல்
வலைப்படு கின்றான் போல வருந்தியே யிரங்கா நின்றான்
கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலிற் றோன்றி
யலைப்படுந் தன்மைத் தன்றே வறுமுக னாடலெல்லாம்.

இவ்வுபமானத்தில் அசைவது சந்திரனன்று, சந்திரனது நிழலுமன்று. அசைவது நீரே. ஆதலால் குமாரக்கடவுளிலே தோன்றும் வாட்டமும் உருக்கமும் அவரதன்று, அவரது சத்தியினதுமன்று; அவை வேறொன்றின் விகாரமாதல்வேண்டும். ஆதலால் இச்சரித்திரம் குமாரக்கடவுள் சத்தியைச் சாருதலைக் கருதுவதன்றென்பதற்கு இப்படலமே சாட்சியாம்.

(ஈ) வள்ளிநாயகியார் குமாரக்கடவுளது சக்தி யல்லராயின், அவர் ஆன்மா ஆதல்வேண்டும். கடவுள் வலிந்துசேரும் பொருள் ஆன்மா ஒன்றே.* இக்க ருத்து திருவாசகத்தில் மலியக் காணலாம்.

நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து நானென தெனுமாயக், கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக் கழறியே திரிவேனைப், பிடித்து முன் னின்றப் பெருமறை தேடிய வரும்பொரு ளடியேனை, யடித்த டித்துவக் காரமுன் றீற்றிய வற்புத மறி யேனே. (அற்புதப்பத்து)

ஆவா வரியய னிந்திரன் வானோர்க் கரியசிவன், வாவாவென் றென்னையும் பூதலத் தேவலித் தாண்டு கொண்டான், பூவா ரடிச்சுவ டென்றலைமேற் பொ றித்தலுமே, தேவான வாபாடித் தெள்ளேணங் கொ ட்டாமோ. (திருத்தெள்ளேணம்)

வள்ளிநாயகியாரைக் குமாரக்கடவுள் மருட்டிப் பிடித்தது போலவே கடவுள் ஆன்மாக்களை வசப்படுத் துவா ரென்பதுந் திருவாசகத்திற் கூறப்பட்டது.

எனைநானென்ப தறியேன்பக லிரவாவது மறி யேன். மனவாசகங் கடந்தானெனை மத்தோன்மத்த னாக்கிச், சினமால்விடை யுடையான்மன்னு திருப்பெ ருந்துறை யுறையும், பனவனெனைச் செய்தபடி றறி யேன் பரஞ்சுடரே. (உயிருண்ணிபபத்து)

ஆன்மாவை நாயகியாகவுங் கடவுளை நாயகனாகவும் அப்பர்சுவாமிகள் ஒரு பதிகம் முற்றிலும் பாவித்தருளி னார்.

---

*அஃதொரு பெண்ணன்றென்பது கூறாதே அமையும்.

திருவாவடுதுறை - திருக்குறுந்தொகை.

குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமுந்
தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்
அழக னாவடு தண்டுறை யாவெனக்
கழலுங் கைவளை காரிகை யாளுக்கே.

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாளல ளாவடு தண்டுறை
மஞ்ச னோடிவ ளாடிய மையலே.

(சு) இப்படலத்தில் வரும் குமாரக்கடவுளது செயல்கள் திருவிளையாட்டென்றும் இப்படலமே கூறும்.

வாடினான் றளர்ந்தா னெஞ்சம் வருந்தினான் மையற் கெல்லை, கூடினான் வெய்து யிர்த்தான் குற்றடிச் சுவடு தன்னை, நாடினான் றிகைத்தா னின்று நடுங்கினா னங்கை தன்னைத், தேடினான் குமரற் கீது திருவிளை யாடல் போலாம்.

கடவுளுக்குத் திருவிளையாடல் ஆன்மாக்களுக்கு வீட்டின்பத்தைக் கொடுத்தற்குரியனவாகிய ஐந்தொழில்க ளென்பது சகல சாத்திரங்களுக்கும் சம்மதம்.

(ரு) வள்ளிநாயகியாரது திருமணச் சரித்திரம் ஆன்மா முத்தியடையும் முறையோடு முழுப் பொருத்தமுடையது. இந்நியாயங்களால் இக்கருத்தை யொட்டித் திருமணச் சரித்திரத்தைக் கூறுவாம்.

சிவபெருமானைக் குறிப்பவராகிய சிவமுனிவர் மூலப்பிரகிருதியாகிய மானை* அருட்கண்ணாற் பார்த்த அளவில் அதிலுள்ள தத்துவங்கள் தோன்றிப் புவனாதி

* மானென்று மூலப்பிரகிருதிக்குப் பெயர்.

களாகிய கர்ப்பமுண்டாயது. அக்கர்ப்பத்திலே காத் தற்றொழிலைச் செய்யும் சிவசத்தியாகிய விஷ்ணுவின் புதல்வி யெனப்படும் ஆன்மா காரண சூக்கும தேகங்களைப் பெற்றது. பின்னர் அது வள்ளிக்குழியாகிய தூலசரீரத்திற் புகுந்தது. அதனாலே அவ்வான்மாவுக்கு வள்ளிநாயகி யென்ற பெயருண்டாயது. வள்ளிநாயகி வேட்டுவராசனாகிய ஐம்பொறியுடைய கையிலும் அதன்மேல் அவன் மனைவியாகிய ஐம்புலன்கள் கையிலுமகப்பட்டுக் கர்மேந்திரியங்களாகிய ஏனைய வேடர்கள் ஏவல்செய்ய வளர்ந்துவந்தாள்.

ஐம்பொறிகளை வேடரென்பது சிவஞானபோதத்திலுள்ளது (சூத் - அ). இராசகுமாரன் வேடர்கையிலகப்பட்டுத் தன்னை வேடனெனக் கருதி வளர்ந்துவர, அவன் தந்தையாகிய இராசன் அவனைக் கண்டு அவர்களினின்றும் பிரித்துத் தன்னுடைய நாட்டுக்குக் கொண்டுபோய் மகுடஞ்சூட்டியமுறை, ஆன்மா ஐம்புலன்களிகைப்பட்டுத் தன்னை யவையாகப் பாவித்து மயங்க, சிவபிரான் அருட்குருவாக வந்து, அதை அவற்றினின்றும் நீக்கி முத்திகொடுத்தற்கு உவமையாகக் கூறப்படுகின்றது

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோற்
றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

என்னுஞ் சிவஞானசித்திச் செய்யுளுமிதையே கூறும். இங்கே மன்னவன்மகன் வள்ளியம்மையும், இரசன் சிவகுருநாதனுகிய குமாரக்கடவுளுமாதல் பொருந்தும். இனி ஆன்மாவானது "புறச்சமய நெறிநின்று மகச் சமயம் புக்கும்.....". எனக் கூறியபடி பல்வகைச் சமயங்களாகிய படிகள் வழியாகச் சைவத்துக்கு வருதல் வள்ளியினுடைய வாழ்க்கையிற் காணலாம்.

மயிற்பீலித்தொட்டில் வாழ்க்கை மெய்யுணர்வு சிறிதுமில்லா உலகாயதம் முதலிய புறப்புறச் சமயங் களையும், மண்சோறுகறி காய்ச்சுதல் புறச்சமய ங்களையும், பேதைப்பருவமும் பெதும்பைப்பருவமும் அகப்புறச்சமய அகச்சமயங்களையும், பன்னிரண்டா மாண்டுப் பருவம் சைவவாழ்க்கைத் தொடக்கத்தையுங் குறிப்பன.

பசுவினைவிளைவாகிய தினைவிளைவைக் காத்திருந்த ஆன்மா அப்பசுவினை முதிர்ந்த பின்னர்ச் சைவநெறி யைச் சார்ந்து சிவவினை செய்தல்வேண்டும். சைவநெ றியைச் சாருதற்குச் சமயதீட்சை பெறல்வேண்டும். இதற்குத் தகுதியாதற்குச் சத்திநிபாதம் வேண்டும். இச்சத்திநிபாதம் மலத்தைப் பக்குவப்படுத்துவதாகிய ஆதிசத்தியாலாவது. யாண்டுங் கருமங்களை முற்றுவிப்ப வராகிய நாரதர் ஆதிசத்திபாம். அவர் வள்ளிநாயகி யாரிடஞ் சென்றனர். இது சத்திநிபாத மெனப்பட லாம். அதன்பின்னர் அவர் முருகக்கடவுளை யடைந்து வள்ளிநாயகியாரது நிலைமை அவருக் குரைத்தனர். குமாரக்கடவுளாகிய குருமூர்த்தம் வள்ளியிடஞ் சென் றது. குமாரக்கடவுள் அவளைக் கண்டு அவளுக்கு வாசகதீட்சை செய்தனர். அவள் சிவரூபமாகிய ஆன்

மாவென்றும், ஐம்புலவேட்டுவப் புதல்வியல்லளென்றுங் கூறி, அவளுடைய உண்மைப்பெயர் ஆன்மாவென்றும், அவளுடைய ஊர் சிவபிரானது திருவடியென்றும் ஊர்க்குச் செல்லும் வழி சிவசத்தியென்றும் அறிவுறுத்தி இவ்வாய்மைகளையே தியானிக்கவேண்டுமென்றும், பிறவற்றை நினைத்தலாகாதென்றும் கட்டளையிட்டருளினர் (பராமுகந் தவிர்தி).

நாந்தக மனைய வுண்க ணங்கைகேள் ஞாலந் தன்னி, லேந்திழை யார்கட் கெல்லா மிறைவியா யிருக்கு நின்னைப், பூந்தினை காக்க வைத்துப் போயினார் புளின ராணோர்க், காய்ந்திடு முணர்ச்சி யொன்று மயன்படைத் திலன்கொ லென்றான்.

வாரிருங் கூந்த னல்லாய் மதிதளர் வேனுக் குன்றன், பேரினை யுரைத்தி மற்றுன் பேரினை யுரையா யென்னி, னூரினை யுரைத்தி யூரு முரைத்திட முடியா தென்னிற், சீரிய நின்சீ றூர்க்குச் செல்வழி யுரைத்தி யென்றான்.

அவர் வள்ளிநாயகியாகிய ஆன்மாவுக்கு இவ்வாய்மைகளை விளக்கிநிற்க, அவளை யென்றும் வளர்த்த வேடராகிய ஐம்பொறிகள் அவளுக்கு முற்பட்டன. அவை

---

* இதனோடு பின்வருந் தேவாரம் ஒத்து நோக்கத்தக்கது:—

முன்ன மவனுடைய நாமங்கேட்டாண் மூர்த்தியவனிருக்கும் வண்ணங்கேட்டாள், பின்னை யவனுடைய வாரூர்கேட்டாள் பெயர்த்து மவனுக்கே பிச்சியானாள், அன்னையையு மத்தனையு மன்றேநீத்தா ளகன்றா ளகலிடத்தா ராசாரத்தைத், தன்னை மறந்தாடன் னாமங்கேட்டா டலைப்பட்டா ணங்கை தலைவன்றாளே. (திருவாரூர் திருத்தாண்டகம்.)

குமாரக்கடவுள் வள்ளிநாயகியாருக்கு அறிவித்தற்காக வினவினர். இத்தேவாரத்தில் நாயகி அறிதற்காக வினவினர்.

பசு கரணங்களாகவே யிருந்தமையாற் குருவைக் காண மாட்டாமற்போயின. "போர்வையெனக்காணுபுவி" என்றார் உமாபதிசிவம். ஆதலால் அவர் அவ்வேடர் முன்னிலையில் வேதாகமசாத்திர அறிவே வடிவுகொண்ட பிறிதோர்பொருளாகிய வேங்கைமரம்போல் நின்றனர். அறிவேறும்போது மேலும் ஆழ்ந்த அறிவைத் தேடும் முயற்சியிற் பொறிகளுக்கு வெறுப்புண்டாயினும், அவ்வறிவு தமக்குத் துணையாகத் தக்கதென வுணருங்கால், அப்பொறிகள் அதை விரும்புவதுபோல வேட்டுவராசனும், முதல் அவ்வேங்கையைக் குறித்தஞ்சினுனாயினும், பின்னர் அது தனக்குத்துணையாகத்தக்கதென்றெண்ணி அதில் அன்புகொண்டான். பொறிகளின் சேட்டையாகிய வேடுவர் விலக, அவளுக்குக் குருவின்மேல கருத்துச் சென்றது. குருமூர்த்தி அவளைப் பார்த்து "இப்புனத்தைக் காத்தல் உன் மேன்மைக்குத் தக்க தொழிலன்று. உனக்கு மேலான பதவியுண்டு. உன்னைத் தேவப்பெண்களும் வணங்கத்தக்கதாக வைத்தல் என்னாலாகும்" என்றார்.* இதன் கருத்து:—நீ பசுவினை செய்து ஐம்புலன்களால் வருமின்பங்களை நுகராதே. நான் உனக்கு முத்தியின்பத்தைத் தந்து தேவர்களும் உன்னை வணங்கத்தக்கதாகச்செய்வேன். குருமூர்த்தி இங்ஙனம் சாத்திர தீட்சை செய்தனர். †

புல்லிது புல்லிது புனத்தைக் காத்திடன்
மெல்லியல் வருதியால் விண்ணின் பால்வரும்

* "தொழப்படுந் தேவர் தம்மாற் றொழுவிக்குந் தன்றொண்டரையே" என்று அப்பர்சுவாமிகளும் பாடியருளினார்.

† இஃதொரு பரம உபதேசம். பசுவினையை விடுத்துச் சிவவினையை நாடுதற்கும் விடயஇன்பத்தை வெறுத்துப் பேரின்பத்தை விழைதற்கும் சாதனமாய உபதேச மிதுவாம். இச்செய்

வல்லியர் யாவரும் வணங்கி வாழ்த்திடத்
தொல்லியல் வழாவளந் துய்ப்ப நல்குவேன். (அஅ)

அப்போது ஆன்மாவாகிய வள்ளியம்மையார் "நாயிற் கடையாய்க் கிடந்த அடியேனைப் பரிசுத்தரான தேவரீர் தீண்டலாமா"* என்றனர். அதன்பின் ஐம் பொறிகளாகிய வேட்டுவராசனும் வேடரும் வந்தனர். இப்போது ஐம்பொறிகள் ஒருவாறு வசப்படுங் கால

---

யுள் எமது நாவில் என்றும், சூக்குமமாயேனு முறையவேண்டிய தொன்று. விஷயசுகங்கள் எம்மைக் கவருங்கால் இச்செய்யுள் அவற்றின் மயக்கத்தைத் தீர்க்கத்தக்கது. நாம் எமது பெரு மையை யுணராது சிறியவராக எம்மை நினைந்து சிறுதொழில்க ளில் முயன்று சிற்றின்பங்களைப் பெருந்தாகத்தோடு தேடுகின் றோம். எமது வல்லபத்தின் கோடியிலோர் பாகமேனும் எமக் குத் தெரியாமையால் நாம் கீழோராய்ச் சோம்பராய்ப் பதர்க ளாய்க் கெடுகின்றோம். நாம் பெரும் வலியோராயினும் புல்லிய இன்பங்களாற் றாக்குண்டு மாள்கின்றோம்! சிவபெருமானுக்கெ திராக மான் மழுக்களைச் செலுத்தத்தக்க வன்மையையுடைய தாருகவன முனிவர்கள் ஒரு வெறும்பெண்வடிவக் காட்சிமாத்தி ரையால் வலியிழந்து பிறராலாட்டப்படும் பாவைகள் போலாயி னர். கல்விகற்கும் மாணுக்கர் தமது விவேகத்தையும் கற்குந் திறனையும் அற்பமாகக் கருதிக் கற்கத் தக்கதிற் கோடியிலொரு பங்கேனுங் கற்கின்றிலர். கற்குங்கால் தம்மைப் புல்லராக நினைப் போர், வளர்ந்த பின்னரும் தம்மைச் சிறுப்பித்துத் தம்மை அடி மைகளாக்குவர். ஒருகுருவினது பிரதான கடன் மாணுக்க னின் ஆற்றலையும் பெருமையையும் வியஞ்சகப்படுத்தி அவனை "விண்ணின்பால் வரும்" ஆடவரும் வணங்க வைப்பதாம். இச் செய்யுளிலுள்ள உபதேசம் திருவைந்தெழுத்திற் சூக்குமமாக விளங்குவது.

* "ஈறிலாதநீ யெளியையாகிவந் தொளிசெய்மானுட மாக நோக்கியுங்-கீறிலாதநெஞ் சுடையனாயினேன் கடையனாயினேன் பட்டகீழ்மையே."
திருச்சதகம்— கக

மாதலாற் குமாரக்கடவுள் வேங்கைமரமாக மறையாமல் ஒருகிழவர்போல நின்று அவர்களுக்குத் திருநீறிட்டார். ‡

இது தீட்சையிலே செய்யப்படும் முதற் கிரியையாகிய திருநீறிடல். இதனாலே சரீரமானது ஆணவத்திற் கடிமையாயிருந்த நிலைமையினின்று சற்றே திருந்திச் சிவவழிபாட்டுக்குத் துணைசெய்யுந் தன்மையை யெய்தும். வள்ளிநாயகி குருவாகிய குமாரக்கடவுளுக்கு நைவேத்தியமாகத் தேன் கனி மா முதலியவற்றைக் கொடுத்து, அக்கினியின் ஏழு நாக்குகளாகிய ஏழுமலைகளைக் கடந்து, அவ்வக்கினியின் உதரமாகிய சுனையிற் செல்லும் நெய்யாகிய பானீயத்தை அவர்பாற் சேர்த்தாள்.† அப்போது குமாரக்கடவுள் பிரணவமாகிய யானை முன்னிற்பச் சிவமாகிய தாம் இடையேநிற்ப அதன் பின்னர் ஆதிசத்தியோடும் மலத்தோடுஞ் சேர்ந்த வள்ளியாகிய ஆன்மா நிற்ப, திருவைந்தெழுத்தின் அநுபவஞானத்தை ஆன்மாவுக்கு வருவித்துச் சமய தீட்சை செய்து சிவலோக இன்பத்தையுந் தமது திருவடிவக்காட்சியையுங் கொடுத்து, "நீ செய்த தவத்தின் பயனாக இது கிடைத்தது" என்றார்.

முந்நான்கு தோளும் முகங்களோர் மூவிரண்டுங்
கொன்னார் வைவேலுங் குலிசமுமே னைப்படையும்
பொன்னார் மணிமயிலு மாகப் புனக்குறவர்
மின்னாள் கண்காண வெளிநின்ற னன்விறலோன்.

---

‡ தீட்சா மண்டபத்தின் மேற்குவாயிலிற் பிரணவாசனத்தில் நிறுத்தி விபூதியிடப்படும்.

† சிவாக்கினிக்குக் கொடுக்கப்படும் நெய் சிவபிரானுக்கு நைவேத்தியமாம்.

சமயதீட்சை பெற்ற ஆன்மா சரியைமார்க்கத்தை அநுசரித்துவந்தது. சரியை மார்க்கம் பெரும்பான்மையாகச் சரீரத்தொழிலையுஞ் சிறுபான்மையாக மனத்தொழிலையும் உடையது. சரியைமார்க்கம் முறையாக அநுட்டித்தபின் கிரியைமார்க்கம் அநுட்டிக்கப்படுவது. அது பெரும்பாலும் மனத்தொழிலையுடையதாதலால், வள்ளியாகிய ஆன்மாவைக் கிரியாமார்க்கத்திற் செலுத்துதற்காக வள்ளியினது தோழியாகிய மனத்தை வசப்படுத்துதற்குக் குமாரக்கடவுள் திருவுளங்கொண்டனர். அத்தோழியையும் அவர் இசைவித்து அம்மார்க்கத்திற்குவேண்டியதாகிய விசேஷதீட்சை செய்து ஆன்மாவைக் கிரியாபாதம் யோகபாதங்களிற் செலுத்தி மறைந்தனர். இதனால் யானெனதென்பனவைகள் கெட, ஆகாமியமாகிய தினைகாத்தல் நின்றது. பின்பு அவள் வீட்டுக்குச் சென்றாள். அங்கே வீட்டிலுள்ளோராகிய இந்திரியங்களொன்றிலும் அவள் பற்றில்லாதவளாய்க் குமாரக்கடவுளின் அருவத் திருமேனியை நினைந்து சிவயோகஞ் செய்துவந்தாள். பொறிபுலன்கள் தங்கள் பழையவாசனையைக்கொண்டு அவளைத் தம்வழிப்படுத்தக் கருதின. அவள் அவற்றுக்கு இடங் கொடுத்தாளல்லள். அவளில் நேர்ந்த வேறுபாட்டின் காரணத்தை அவைகள் ஆராய்ந்து தமது தலைவராகிய முருகரது தீண்டுதலால் இது நேர்ந்ததென அறிந்தன.* அவைகள் இதனால் அயர்ந்திருக்கக் குமாரக்கடவுள் முன்னமே வசப்பட்ட மனமாகிய தோழிவழியாக வள்ளியைப் பெற்று அத்தோழியையும் வேடரையும் நீங்கி அவளுக்

* விடயசுகங்களைப் பெறுதற்காகக் கடவுளை வழிபடல் அச்சுகங்களை நுகரும் பொறிபுலன்களுக்குச் சம்மதமும் விருப்பமுமாம். இதனாலே கடவுளை ஆர்வத்தோடும் வணங்குவதுண்டு

குக் கைவல்லியத்தைக் கொடுத்துத் தம்மையே தனித் துணையாக்கிக் கொண்டு சென்றனர்.

வேடுவராகிய பொறிபுலன்கள் ஆன்மா தம்மை முற்றாக மறந்ததினால், அணையமுன் உயர்ந்தெழும் விளக்கொளிபோல், அவளைக் கவரற்குத் தம்மாலி யன்ற இறுதிமுயற்சிகளைச் செய்தன. அம்முயற்சிகளை ஒழித்தற்காகக் குமாரக்கடவுளுடைய சேவல் கூவிற்று. அதன் சத்தத்தினால் ஐம்பொறிகளாகிய வேடர் மயங்கி வீழ்ந்தனர். ஆன்மாவானது மலபந்தத்தினின்றும் அற நீங்கிற்று. அப்போது நாரதர் தீவிரதரசத்தியாக வந்து வள்ளியிற் பதியக் குமாரக்கடவுள் வேடர்களாகிய பசுகர ணங்களை வள்ளியைக்கொண்டே யெழுப்பித்துத் தமக்கு ரிய சிவகரணமாக்கி யாவரு முவப்ப இறுதித்தீட்சையா கிய நிர்வாணதீட்சை யென்னுந் திருக்கலியாணத்தைச் செய்தருளினர். அதன் அங்கமாகிய நயனதீட்சையால் அவளது ஆன்மநிலையை (வேட்டுவவடிவத்தை) நீக்கினர்.

அன்னதோர் வேலை தன்னி லறுமுக முடைய வள்ள
றன்னுழை யிருந்த நங்கை தனையருள் ளோடு நோக்கக்
கொன்னவில் குறவர் மாதர் குயிற்றிய கோல நீங்கி
முன்னுறு தெய்வக் கோல முழுதொருங் குற்ற தன்றே.

அப்போது ஆன்மா உமாசமேதராகிய சிவபிரா னைக் கண்ணுற்றுச் சிவதரிசன நிலையைப் பெற்றது. பின்னர் குமாரக்கடவுள் மலமுயற்சிகளெல்லாந் தணிந்த நிலையாகிய தணிகைமலையிலே சிவபோகசாயுச்சியங்களை ஆன்மாவுக்குச் சேர்த்தருளினர்.

ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வே
ளேறிய மஞ்ஞை வாழ்க யானைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடிய ரெல்லாம்.

பன்னெறி யதனிற் செல்லும்
போக்கினை விலக்கி மேலா
நன்னெறி யொழுகச் செய்து
நவையறு காட்சி நல்கி
யென்னையு மடிய னாக்கி
யிருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடக்தோள் வள்ளல்
பாதபங் கயங்கள் போற்றி.

வேலும்மயிலும் துணை.

கச்சியப்ப சிவாசாரியர் திருவடி வாழ்க.



